# திறமையின் திருஉருவம்

# ராஜாதினகர்



டாக்டர் எஸ்.எம்.கமால்



# திறமையின் திருவுருவம் ராஜா தினகர்



(ராஜா தினகரரது வாழ்க்கைச்சுருக்கம்)

ஆசிரியர்

**டாக்டர் எஸ்.எம்.கமால்**

பதிப்பு :

**சர்மிளா பதிப்பகம்**

21, ஈசா பள்ளிவாசல் தெரு,

இராமநாதபுரம் - 623 501.

26.9.1999 ம் தேதி இராமநாதபுரத்தில் நடைபெற்ற
முகவை மாநகர மும்மணிகள் நினைவு விழா வெளியீடு

முதல் பதிப்பு
செப்டம்பர் 1999



**விலை ரூ. 50-00**

வெளியீடு :
ராஜா தினகர் அறக்கட்டளை
"இராமமந்திரம்"
பழைய மருத்துவமனை வீதி
இராமநாதபுரம் - 623 501.




---

அச்சும் அமைப்பும்

அன்னை ஆப்செட் பிரிண்டர்ஸ்
வள்ளல் பாண்டித்துரைத் தேவர் வணிக வளாகம்,
12/14, ராஜ வீதி, இராமநாதபுரம் - 623 501.

# Bibliographical Data

| | | |
|---|---|---|
| 1. Title | : | **THIRAMAYIN THIRU URUVAM RAJA DHINAKAR** |
| 2. Author | : | **Dr. S.M. KAMAL** |
| 3. Language | : | Tamil |
| 4. Publication | : | First Edition, Sept 1999 |
| 5. Copyright | : | Author |
| 6. Paper used | : | J.K.Map litho (18.6) |
| 7. Size of the Book | : | 21.5cm X 14cm |
| 8. Type used | : | 14mm Tamil Sangeetha |
| 9. No. of Copies | : | 1000 |
| 10. Pages | : | 153 + 9 = 162 |
| 11. Printer | : | Annai offset printers, Ramanathapuram |
| 12. Publisher | : | Sharmila Publishers, Ramanathapuram |
| 13. Subject | : | Biography of Raja M. Dhinakar of Ramanathapuram |
| 14. Summary | : | Life Sketch of Raja Dhinakar (From 1871 AD to 1942 AD) |
| 15. Price | : | **Rs. 50/-** |

II

# சமர்ப்பணம்



*சேதுபதி மன்னர் செழுங்குடியில் வந்த*
*செங்கதிரோன் செம்மனத்தன் சீர்மறவன்*
*தீரமிகு கலைகள் தேர்ந்த திறல்வீரன் தெளிந்துணர்ந்த*
*திருத்தொண்டன் தேசம் புகழ் வள்ளல் தினகர்*
*பாசமுடன் வளர்த்த*
*நேசமலர் அன்புமகள்*

**வசந்தவேணி நாச்சியார்**

அவர்களுக்கு

முனைவர் **கோ. விசய வேணுகோபால்** எம்.ஏ.,எம்.லிட்.,பி.எச்.டி,
**பிரெஞ்சு இந்தியவியல் ஆய்வு நிறுவனம்**
**பாண்டிச்சேரி – 1**

## அணிந்துரை

எனது அன்பு கெழுமிய நண்பர் சேது நாட்டு வரலாற்றுச் செம்மல் டாக்டர் எஸ்.எம். கமால் அவர்கள் சேது அரசு மரபினர் குறித்துத் தொடர்ந்து எழுதி வருகின்றார். எழுதியவற்றிற்கெல்லாம் பல மதிப்புமிகு பரிசுகளையும் பெற்று வருகின்றார். கண் பழுதடைந்த நிலையிலும் இவரால் எப்படி எழுத முடிகிறது என வியக்கின்றேன்.

தற்போது சேது நாட்டரசர் தினகரர் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதி வெளியிடுகின்றார். சேது நாட்டு வரலாற்றின் பல முக்கிய பக்கங்கள் இன்னும் தேசிய வரலாற்றின் பகுதிகளாக அமையாமல் உள்ளன. டாக்டர் எஸ்.எம். கமால் அவர்களின் பெரு முயற்சியால் இவை இப்பொழுது மெதுவாகப் புலப்படுத்தப்பட்டு வருகின்றன. இம்முறையில் ராஜா தினகர் அவர்களது பன்முக ஆளுமைப் பரிமாணங்கள் இந்நூலில் நன்கு புலப்படுத்தப்பட்டுள்ளன. தினகரர் அவர்களின் இசைப்புலமை பற்றிய செய்திகள் தமிழக இசை வரலாற்று நூல்களில் கட்டாயம் இடம் பெற வேண்டியவை. இதுபோலவே இவரது இலக்கியத்திறன், கலை உள்ளம், நூலறிவு குறிப்பாக இவரது ஆங்கில நூற்புலமை தமிழ் மொழிப் புலமை, கொடை உள்ளம், ஆகியன நன்கு விளக்கப்பட்டுள்ளன.

இவை எனக்குப் புதிய பரிமாணங்களைச் சுட்டிக் காட்டியது போலப் பலரும் உணர்வர் என்பதில் ஐயமில்லை. அரசர் தினகரரை இராஜா தேசிங்குடன் ஒப்பிட்டுள்ளமை சுவையானது. டாக்டர் எஸ்.எம். கமால் அவர்களது சீரிய முயற்சியாலும் இடைவிடாத உழைப்பாலும் இவை நமக்குக் கிடைத்துள்ளன. ஆசிரியர் இத்தகு நூல்களை மேலும் படைத்தளிக்க இவரது உடல்நலமும் ஊக்கமும் சிறந்து விளங்குவனவாக.

வாழ்க டாக்டர் கமால் ! வளர்க அவரது தமிழ்ப்பணி

பாண்டிச்சேரி - 1
18-09-1999

அன்பன்

[signature]

# பதிப்புரை

**ராஜா எம். தினகர் சேதுபதி**, பைந்தமிழ்க் காவலர் பாஸ்கர சேதுபதியின் உடன் பிறப்பு. இவர் ஒரு பன்மொழிப் புலவர். பல்கலைச் செல்வர். பண்பாடு மிக்கவர். தமிழகம் அளாவிய சேது மன்னர் குடிப்பெருமையை மடல் அவிழ்ந்த மனோரஞ்சித மலராக மணம் வீசச் செய்தவர்.

காலப் புழுதியில் படிந்து மறைந்து விட்ட இவரது இசைப்புலமை இலக்கியத்திறன், கலை உள்ளம், நூலறிவு, அன்பு நெஞ்சம், கொடை உணர்வு ஆகியவை அனைத்தும் இன்று மட்டுமல்லாமல், நாளைய தலைமுறையினருக்கும் நம்பிக்கை ஒளி ஊட்டுவன.

இத்தகைய சிறந்த சேது நாட்டுச் செம்மலைப் பற்றி சேது நாட்டு வரலாற்று ஆசிரியரும் தமிழ் மாமணியுமான டாக்டர் எஸ்.எம். கமால் அவர்கள் வரைந்து இருப்பது மிகவும் பொருத்தமான பயனுள்ள பணியாகும்.

அவரது இந்த எழுத்தோவியத்தை, எங்களது வெளியீடாக தமிழக வாசகர்களுக்கு வழங்குவதில் பெருமை கொள்கிறோம்.

நாள் : ***26.09.1999***

**சர்மிளா பதிப்பகம்**
இராமநாதபுரம்.

# நெஞ்சார்ந்த நன்றி

பல்கலைச் செல்வர் தினகர் சேதுபதியின் வாழ்க்கை இந்தச் சிறு நூலாகத் தொகுப்பதற்குப் பெரிதும் உதவிய ராணி எம். வசந்த வேணி நாச்சியார் அவர்களுக்கும் பிரபக்களூர் மூதாட்டி குஞ்சரம் நாச்சியார் அவர்களுக்கும், ராணி எம். பானுமதி நாச்சியார் அவர்களுக்கும், சிங்கம்பட்டி மன்னர் சிவஞானச் சித்தர் திரு. டி.என்.எஸ். முருகதாஸ் தீர்த்தபதி அவர்களுக்கும் எனது செஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலின் மெய்ப்புகளைச் சரிபார்த்து நூல் அமைப்புக்குரிய கருத்துக்களை வழங்கி உதவிய பேராசிரியர் **திரு. மை. அப்துல் சலாம்**, M.A, M.Phil., அவர்களுக்கும் எனது ஆழிய நன்றி.

மற்றும் இந்த நூலின் படிகளை அழகுற தட்டச்சில் வடித்து அளித்த **திரு. அ. சீதாபதி** B.A., அவர்களுக்கும் குறுகிய காலத்தில் இந்த நூலினை அழகாக அச்சிட்டு வழங்கிய **இராமநாதபுரம் அன்னை ஆப்செட் பிரிண்டர்ஸ்** நிறுவனத்திற்கும் எனது நன்றி.

**டாக்டர் எஸ்.எம். கமால்**
நூலாசிரியர்

| உள்ளே | | பக்கம் |
|---|---|---|
| 1. | இளஞ்சூரியர் | 1 - 7 |
| 2. | கல்விப்பயணம் | 8 - 13 |
| 3. | பிரிந்தவர் கூடினர் | 14 - 20 |
| 4. | திவான் பதவியில் | 21 - 30 |
| 5. | சேதுநாட்டு தேசிங்குராஜா | 31 - 35 |
| 6. | சூறி தவறாது | 36 - 38 |
| 7. | கவிதைக்கனவு | 39 - 44 |
| 8. | கவிதைக்குப் பாராட்டு | 45 - 50 |
| 9. | தொடரும் இலக்கியப்பணி | 51 - 55 |
| 10. | முன்னோடி முயற்சிகள் | 56 - 62 |
| 11. | மகப்பேறு தந்த மகிழ்ச்சி | 63 - 70 |
| 12. | மைசூரில் பயிற்சி | 71 - 75 |
| 13. | வாழ்வில் காரிருள் | 76 - 83 |
| 14. | தந்தையும் மகளும் | 84 - 92 |
| 15. | சமரச வாழ்வு | 93 - 100 |
| 16. | இறுதி நாள்களில் | 101 - 108 |
| 17. | புகழுடம்பு | 109 - 113 |
| 18. | மேலும் சில வரிகள் | 114 - 116 |
| 19. | பின் இணைப்புகள் | 117 - 153 |



# இளஞ்சூரியர்

பாண்டிய நாட்டின் கீழக்கடற்கரையை அடுத்து பாலையும் நெய்தலும், முல்லையும், மருதமும் மயங்கிய நால்வகை நிலத்தின் அதிபதியாக விளங்கியவர்கள் சேது மன்னர்கள். இந்தப் பகுதியில் மிகுதியாக மறவர்கள் வாழ்ந்து வந்ததால் இந்தமன்னர்கள், மறவர் சீமை மன்னர்கள் என்றும், இந்தச் சீமையின் கீழக்கோடியில் இராமபிரான் அமைத்த சேது அணையின் காவலர்கள் என்ற பொருளில் இவர்கள் சேதுபதிகள் எனவும் அழைக்கப்பட்டனர்.

கி.பி 15 ஆம் நூற்றாண்டு முதல் வரலாற்று நாயகர்களாக விளங்கிய இந்த தன்னரசு ஆட்சியாளர்கள் தமிழகத்தின் ஆன்மிக வளர்ச்சிக்கும் தமிழ் மொழியின் செழுமைக்கும் சிறப்பாகச் செய்துள்ளதை வரலாறும் இலக்கியங்களும்

வரைந்துள்ளன. இன்னும் இந்தியத் திருநாடெங்கும் புகழ்பெற்று விளங்கும் இராமேசுவரம் திருக்கோயில் இந்த மன்னின் கட்டுமானக் கலைக்கு வழங்கிய காணிக்கையாக விளங்குகின்றன.

இந்த மன்னர்கள் காலப்போக்கில் வெள்ளையருக்கு எதிரான விடுதலை இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்ட காரணத்தினால் தங்களது தன்னரசு நிலையையும் சுயேட்சையான அரசியல் தலைமையையும் இழந்து குறுநில மன்னர்களாக (ஜமீன்தார்களாக) 19-ஆம் நூற்றாண்டு தொடக்கம் முதல் இருந்து வந்துள்ளனர். வளமையும் அதிகாரவரம்பும் சுருங்கிய இந்தப் பிற்காலச்சேதுபதிகளில் மிகவும் சிறப்பாக குறிப்பிடத்தக்கவர் **துரைராஜா முத்துராமலிங்க சேதுபதி** என்பவர் (கி.பி.1841 -1873) இவரது வாழ்வு மிகவும் குறுகிய காலமாக அமைந்திருந்த போதிலும், இவரது சாதனைகள் அளவிறந்தன.

அவர் ஒரு பன்முகக் கலைஞராகத் திகழ்ந்தார். தமிழ்ப்புலவராக, உடற்பயிற்சி வல்லவராக, குதிரை ஏற்றத்தில் தேர்ந்தவராக, பலரும் பாராட்டத்தக்க மேதையாகவும் விளங்கினார். இவர் ஒரு இசைப்புலவர், நிமிடகவி,புலவர்களைக்,கலைஞர்களைப் பாராட்டி பொன்னும் பொருளும் வழங்கிய புரவலர் எல்லாவற்றிக்கும் மேலாக குமரக்கடவுளிடம் ஆழிய பக்திகொண்டவர்.

இவரது தமிழ்ப்புலமைக்குச் சான்றாக, இவர் படைத்துள்ள இலக்கியங்கள் வாழ்க்கையை வளமுறச் செய்யும் நீதி போதனைகளைக் கொண்டதாகவும் உள்ளன.

இலக்கியங்களையும் தனிப்பாடல்களையும் சேர்த்து ஆயிரத்திற்கும் அதிகமாக பாடல்களைப் பாடியுள்ளார். இசைத்துறையிலும், இவரது இசைப்பாடல்கள் ஈடும் இணையும் இல்லாத சாகித்யங்களாக விளங்குகின்றன. சென்ற நூற்றாண்டில் தன்னேரிலாத இசைப்புலவர்களாக விளங்கிய, **வையை மகாவைத்தியநாத பாகவதர், இராமசாமி சிவன், குன்னக்குடிகிருஷ்ணஐயர்** போன்ற சங்கீத "சாம்ராட்டுகள்". இந்த மன்னரது பாடலில் அமைந்து தொனிக்கும், கருத்தும் கேட்போர் மனதில் இனிமையைக்கிளறிவிடும் ராக, தாளக்கட்டுகளையும் போற்றியுள்ளனர்.

இந்த மன்னரது இசைத்திறமைக்கு ஒரு தமிழ்ப்புலவர் வழங்கியுள்ள காணிக்கை. இந்த மன்னருடன் இசைவாதில் தோற்ற நாரதமுனியும் விண்ணிலே அலைந்து கொண்டு இருக்கிறார்.

" மந்தரநேர் புயத்தன் முத்துராமலிங்கச்
சேதுபதி மதுர கீதச்
செந்தரம் ஓர்ந்து இயக்கரெல்லாம் தினமும்
மயல் உற்றதன்றி திருந்து வினைச்
சுந்தர நாரதனாம் அந்தத் தும்புருவும்
இம்பரிடைத் தோற்றார் ஆகி
அந்தரம் மேல் அலைந்தனரேல் அதற்குவமை
எதைப் புகழ்வது அறிந்து மாதோ !

. ஒப்புவமை இல்லாத இசைக்கலைஞர் "கல்வியிற் பெரியவன் கம்பன்" என்பது உலக வழக்கு.

அந்த மகாகவி கம்பனே நமது மன்னரது மேதா விலாசத்தைக்கண்டு மயங்கி கம்பு (கழி) என வியந்துநின்றார் என இன்னொரு புலவர் பாடியிருப்பது வெறுங்கற்பனையல்ல. இதோ அவரது அற்புதக் கற்பனையைக் கொண்ட கவிதை

" கம்பனும் கண்டு மயங்கிக்
கம்பென நிற்கும் வகை
வம்புபுகழ் அமுதென்ன வண்சொல்லும்
பொருட்பொலிவும்
பம்பிய கற்பனைச் சுவையும்
பல்கு கவி பல பகர்வோர்
உம்பர் பிரான் எனப் புலவர் உறும்
அவையில் ஒளி பெரியோன் !

இத்தகைய பேரறிஞர் மிகவும் குறுகிய முப்பத்து இரண்டாவது ஆண்டில் காலமானது தமிழுக்கும் தமிழ் இசைக்கும் ஈடு இணையற்ற பெரும் இழப்பாகும்.

இவருக்கு இரண்டு ஆண் மக்களும் நான்கு பெண் குழந்தைகளும் இருந்தனர். ஆண் மக்களின் மூத்தவர் பாஸ்கரர் (கி.பி.1868-1903) என்றும், இளையவர் தினகர் (கி.பி.1871-1942) என்றும் அழைக்கப்பட்டனர் தங்களுக்கு அடுத்தடுத்து ஆண் மக்கட்பேறு கிடைத்தால், அந்த குழந்தைகளுக்கு முறையே இராமர், லெட்சுமணர் எனப் பெயரிடுவது அந்தக் கால வழக்கமாகயிருந்தது. இந்தப் பழக்கத்தைத் தவிர்த்து இந்த மன்னர் தமது இரண்டு ஆண் மக்களுக்கு உலகின் அனைத்து மக்களது

உயிர்ப்புக்கு உதவுகின்ற உயிருட்டுகின்ற ஆதவனின் பெயரை பாஸ்கரர், தினகரர் எனப்பெயர் சூட்டியிருப்பது ஒரு புதுமையான செயலாகும். ஒரு வேளை அவர்கள் இருவரும் பிற்காலத்தில் ஒளிமயமான சூரியனைப் போன்று வாழ்வில் சிறந்து புகழ் படைக்கும் மக்களாக அவர்கள் மலரக் கூடும் என அந்தத் தந்தையின் உள்ளம் நினைத்திருக்கும். அந்த நினைப்பு சரியானது தான் என்பதை இந்த இரு அரச குமாரர்களது பிற்கால சாதனைகள் உறுதிப்படுத்துகின்றன. தக்கார் தகவிலர் என்பது அவரது எச்சத்தால் காணப்படும் என்ற வள்ளுவரது வாக்கிற்கு இவர்களை விட வேறு சிறந்த எடுத்துக்காட்டு இருக்கமுடியாது.

## பாஸ்கர சேதுபதி

மூத்தவரான பாஸ்கரர் சேது நாட்டின் ஆட்சிப்பொறுப்பை ஏற்று நடத்திய காலத்தில் பல சாதனைகளைப் படைத்துள்ளார். ஆன்மீகத்துறையில் ஒரு பெரும் புரட்சியையே ஏற்படுத்த முயன்றார். குறிப்பாக அவரது சமஸ்தானத்தின் கட்டுப்பாட்டில் உள்ள சமஸ்தானக் கோயில்களின் வழிபாடும் விழாக்களும், ஆகமங்கள் அடிப்படையில் நடைபெறுவதற்கு தக்க ஏற்பாடுகளைச் செய்தார். ஒரு சிறந்த சைவ சித்தாந்தியாகவும் செந்தமிழ்ப் புலவராகவும் இந்த மன்னர் விளங்கிய காரணத்தினால் பல மணி நேரம் புராண இதிகாசங்களையும் ஆன்மிக வாழ்வு பற்றிய அரிய வரலாறுகளையும் எடுத்துக்கொண்டு ஆங்கிலத்திலும், தமிழிலும் கடல்மடை திறந்தது போன்று

கருத்துக்களைக் கொட்டி சொற்பெருக்காற்றும் செந்நாப் புலவர்.

மேலும் தமிழ்ப்புலவர்களை ஆதரித்து தக்க கொடைகள் வழங்கியும் மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை கி.பி.1901ல் தோற்றுவிப்பதற்கு **வள்ளல் பாண்டித்துரைத்தேவர்** அவர்களுக்கு மிகவும் உதவியாக இருந்தார். ஆண்டுதோறும் இராமநாதபுரம் அரண்மனையில் நடைபெற்ற நவராத்திரி விழாவில் தமிழிலும் வட மொழியிலும் வல்ல வித்தகர்களுக்குச் சிறப்பு செய்தும் பல்வேறு துறையில் வல்லுநராக விளங்கிய கலைஞர்களையும் சிறப்பித்தும் சன்மானம் வழங்கும் அரிய பழக்கத்தைக் கொண்டு இருந்தார்.

இவைகளுக்கெல்லாம் மேலாக இந்த மன்னர் செய்த அரியசாதனை கி.பி.1893ல் அமெரிக்க நாட்டு சிகாகோ நகரில் நடைபெற்ற சர்வ சமய மாநாட்டில் இந்து மதச் சிறப்பையும் இந்தியக்கலை பண்பாட்டுப் பெருமைகளையும் பறை சாற்றுவதற்கு சுவாமி விவேகானந்தரைத் தேர்வு செய்து தமது சொந்தச் செலவில் அங்கு அனுப்பி வைத்தது ஆகும்.

சேதுபதிகளில் ஆங்கிலப் படிப்பும் பட்டமும் பெற்ற முதல் மன்னர் பாஸ்கரர் சேதுபதி. மதுரையில் இயங்கிவரும் சேதுபதி மேனிலைப்பள்ளி இவரது கொடையில் பிறந்தது. மதுரைக் கல்லூரியும் சென்னை தாம்பரம் கிறித்தவக்கல்லூரி மற்றும் பல கல்வி நிறுவனங்களும் மாணவர் விடுதிகளும் இவரது கொடை உள்ளத்தின் மறுவடிவாக எழுந்தன. இந்த இளம்

மன்னரது ஈதல் இயல்பை ஏற்றிப் போற்றிய இரு கவிதை வரிகள்கள் வாசகர்களுக்காக கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

"ஆலயம் சீரா(கு)மா அரும்புலவர் வாழ்வாரா
காலமெல்லாம் தருமம் தழைத்தோங்குமா ஞானச்
சாந்தகுணச் சேதுபதி தன்மரபிற்பாற்கரனாம்
வேந்தன் பிறவா விடில்"

"தங்கமலையைப் பவுனாக்கி சந்திரன் சார்கிரியை
துங்கம் பொருந்திய ரூபாயாக்கிச் சொரிந்திட்டாலும்
திங்கம் குடைதங்கும் பாஸ்கர பூபன் செழுங்கமலச்
செங்கைக்கு பற்றுமாகணநேர செலவினுக்கே !"

அத்தகைய பெருங்கொடையாளிதான் மன்னர் பாஸ்கரர். ஈந்து சிவந்த இருகரமும் ஆய்ந்து சிவந்த அருள் நெஞ்சினர். கி.பி.1894ல் சிருங்கேரி பீடாதிபதி ஜகத்குரு அபிநவ நரசிம்மபாரதி இராமநாதபுரம் அரண்மனைக்கு விஜயம் செய்தபொழுது, அவருக்கு குருதட்சணையாக இராமநாதபுரம் சமஸ்தானத்தையே தானம் வார்த்தவர். ஈதல், இசைபட வாழ்தல் என்ற இலக்கிய வரிகளுக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர்.

பெருங்கொடையாளியும் அரிய பண்பாளருமாகிய மன்னர் பாஸ்கர சேதுபதியின் இளைய சகோதரர் ஒரே தம்பி தான் தினகர் சேதுபதி.





# கல்விப்பயணம்

இராமநாதபுரம் சமஸ்த்தான அதிபதியாக இருந்த துரைராஜா முத்துராமலிங்க சேதுபதி காலமாகி இரண்டு ஆண்டுகள் ஆகி விட்டன. ஒரு சமஸ்தானாதிபதியின் இறப்பினால், இயலாத்தன்மையினால் சமஸ்த்தான் நிர்வாக இயந்திரம் பாதிக்கப்பட்டு அரசிற்கும் மக்களுக்கும் சிரமங்கள் ஏற்படக்கூடாது என்பதற்காக இந்திய அரசாங்கம் "கோர்ட் ஆப் வார்ட்ஸ்" சட்டத்தை இயற்றி நடைமுறைப்படுத்தி வந்தனர். ஆங்கில துரைத்தனத்தார் இறந்த சமஸ்த்தான அதிபதியின் இளம் மக்களை வளர்த்து, பராமரித்து, வயது வந்த பின்னர் அந்த சமஸ்த்தான நிர்வாகத்தை அந்த வாரிசுதாரிடம் ஒப்படைத்தும் வந்தனர்.

இறந்து போன சேதுபதி மன்னரது இருமக்களான பாஸ்கரர் (வயது 7) தினகரர் (வயது 5) ஆகிய

அரசிளங்குமாரர்களை, வளர்த்துப் பராமரித்து வரும் பொறுப்பை சென்னை துரைத்தானத்தார் ஏற்றுக் கொண்டனர். பாஸ்கரரும் தினகரரும் இராமநாதபுரத்தில் இருந்து சென்னை பட்டணம் பயணமாகார்கள். இவர்கள் இருவரும் சென்னை பட்டணத்தில் தங்கி வாழ்வதற்கு ஏற்ற ஒரு மாளிகை ஏற்பாடு செய்யப்பட்டது. கர்னாடக நவாப்பாக இருந்து கி.பி.1795ல் காலமான வாலாஜா முகம்மது அலி அவர்கள் வழித் தோன்றல்கள் வாழ்ந்து வந்த ராயப்பேட்டை அமீர்மகால் மாளிகையின் மேற்குப்பகுதியில் அமைந்து இருந்தது, இராமநாதபுரம் அரசகுமாரர்களுக்காக. மாளிகையின் பெயர் "உட்லண்ட்ஸ்" என்பது. இல்லத்திற்குப் பெயர் ஆங்கிலத்திலா என்று இன்று நாம் நினைக்கலாம்.

ஆனால், அன்று ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் தமிழ் நாட்டில் ஆங்கில அரசாங்கம் செயல்பட்டு வந்ததால், எல்லாத் துறைகளிலும், நிலைகளிலும் ஆங்கில மொழியின் தாக்கம், ஆங்கிலேய நாட்டு பழக்கவழக்கங்கள், பண்பாடு, நடைஉடை, அனைத்திலும் பிரதிபலித்தது. நமது நாடு, மொழி, பண்பாடு, என்ற உணர்வுகள் அன்று எழுவதற்கு இடமே இல்லை. இந்தப்புதிய ஆங்கில மொழியும், நாகரிகத்தின் மக்களை மிகவும் கவர்ந்ததுடன் மக்களின் ஒரு பகுதியினர் புதிய நாகரிகமும் நாசகார எல்லைக்கே சென்றுவிட்டனர். இதனைக் பற்றி மனம் வருந்திய தமிழறிஞர் மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்கள், "ஆரண வாயினர், மதுபானத்திலும் பூரணராயினர்" என்று பாடினார்.

படிக்கும் அறை, வரவேற்பு அறை, படுக்கைஅறை, உடுப்புகள் அறை, உணவுக்கூடம், குளியல்அறை, கழிப்பறை, விளையாட்டுத்திடல், என்ற தனித்தனிப் பகுதிகளை இந்தச் சிறுவர்கள் எவ்விதம் பயன்படுத்த வேண்டும், நடக்கும் பொழுதும், உடுக்கும் பொழுதும், இருக்கும் பொழுதும், எவ்விதம் உரையாட வேண்டும், எத்தகைய பழக்கவழக்கங்களைப் பேண வேண்டும் என்பதை அந்த மாளிகையில் நடத்துபவராக நியமிக்கப்பட்ட ஆங்கில பெண்மணியும், தாதிகளும், அவர்களுக்கு ஆங்கில பாணியில் பழக்கவழக்கங்களைக் கற்பித்து வந்தனர்.

அவையனைத்தும் இராமநாதபுரம் அரண்மனைச் சூழலுக்கு மிகவும் மாறுபட்டவையாகவும், முற்றிலும் புதுமையாகவும் இருந்தாலும், அவைகளை அந்தப்பிஞ்சு உள்ளங்கள் அப்படியே கிரகித்து ஏற்றுக்கொண்டன. எதிர் காலத்தில் ஆங்கிலப் பேரரசின் வலுவான நிர்வாகத்தினராக விளங்க வேண்டிய சிற்றரசர்கள் அல்லவா இந்தச் சிறுவர்கள். சென்னை எழும்பூர் பகுதியில் உள்ள லாங்டன்ஸ் கார்டனில் அமைந்த இருந்த ஆங்கிலப் பள்ளிக்கு அவர்கள் நாள்தோறும் "சேரியட்" என்று வழங்கப்பட்ட குதிரைவண்டியில் சென்று ஆங்கிலக்கல்வி பயின்றனர்.

சில நாட்களில், மரினா கடற்கரைப்பகுதிக்கும், மாலை வேளைகளில் சுற்றுலா சென்று வருதலும் உண்டு. இரு இளவல்களும் இராமநாதபுரம் அரண்மனையில் உள்ள தாயார், தங்கைகள் நினைவு இல்லாமல் பட்டண வாழ்க்கையில் ஆழ்ந்து இருந்தனர்.

நாட்கள் ஓடி மறைந்து வருடங்கள் ஆயின. அரசிளங்குமாரர்கள் தொடக்கக் கல்வியும் கற்று உயர்கல்வியும் கற்று இலக்கியங்களைப் படித்து ரசிக்கும் பாங்கினைப் பெற்றனர்.

பாஸ்கரர் தாம்பரத்தில் உள்ள கிறித்தவக் கல்லூரியில் பட்டப்படிப்பில் சேர்ந்தார். தினகருக்கு பட்டப்படிப்பை விட நுண் கலைகளில் ஆர்வம் மிகுந்து இருந்தது. ஆதலால் இவர் சென்னை எழும்பூரில் உள்ள கலைகள் மற்றும் கைத்தொழில் கல்லூரியில் சேர்ந்து ஓவியம், சிற்பம் , ஆகிய கலைகளைப் பயின்று பட்டயமும் (Diploma) பெற்றார். சென்னை நகர வாழ்க்கையில் ஆங்கில மொழியில் தேர்ச்சியும் புலமையும் பெற்று விட்டாலும், கல்லூரிப் படிப்பின் பொழுதே குதிரை ஏற்றம், துப்பாக்கி சுடுதல்,ஆங்கில மொழியில் அமைந்த பாடல்களைப்பாடுதல் போன்ற ஓய்வு நேரக் கல்விகளையும் தினகர் பெற்றார்.

இன்னும் சிறந்த தமிழ்ப்புலவர்களும், சமஸ்கிருத பண்டிதர்களும் உட்லண்ட்ஸ் மாளிகைகளுக்கு வந்து இருமொழி இலக்கியங்களையும் முறையாக கற்றுக் கொடுத்தனர். இவரது முன்னோர்களான சேதுபதி மன்னர்கள் தமிழ், சமஸ்கிருதத், தெலுங்கு இலக்கியங்களைக் கேட்டு ரசித்து, புலவர்களுக்கு பொன்னும் பொருளும் வழங்கும் புரவலராக மட்டுமே சிறந்து விளங்கினர். ஆனால் இளைஞர் தினகரோ, தாம் எய்தியுள்ள மொழிப்புலமையைம் பொருளும் வழங்கும் புலவராக மட்டுமே சிறந்து விளங்கினர், ஆனால் இளைஞர் தினகரோ, தாம் எய்தியுள்ள மொழிப்

புலமையைப் பிறரும் கேட்டு மகிழும் வண்ணம் ஆங்கில கவிதைகளை இயற்றி வழங்கும் கவிஞராகவும் திகழ்ந்தார்.

சென்னை பட்டண வாழ்க்கை இந்த அரசினங்குமாரர்களை வேறு எந்தத் துறையிலும் பெற்றிராத புலமையைக் கல்வித் துறையில் பெறுமாறு செய்தது அவர்களைச் சிறந்த கல்விமான்களாக பக்குவப்படுத்திவிட்டது . தமையனார் தமிழ் இலக்கிய நூல்களில் சிறந்த பாண்டித்யம் பெற்றது போன்று , இளம் தினகர் ஆங்கில மொழிப் புலத்திலும், ஆங்கில இலக்கியங்களிலும் அன்றைய தமிழக மக்கள்யாரும் பெறாத புலம்மையைப் பெற்று இருந்தார்.

தெய்வ அனுக்கிரகத்திற்கு அடுத்தபடியாக இந்த இளைஞர்களைப் பயிலுவித்த அங்கில நாட்டு ஆசான்களே, இந்தப் பெருமை மிகு பேற்றிற்கு பெரிதும் காரணமாக அமைந்த விளங்கினர். அன்று ஆங்கிலேயர், தாங்கள் ஏற்ற கடமையைச் சிறிதும் குறை ஏற்படாத வண்ணம் பூரணமாகச் செய்து முடித்தனர் என்பதற்கு இந்த அரசகுமாரர்கள் பெற்ற கல்வியே சிறந்த எடுத்துக்காட்டு ஆகும் . அடுத்து இவர்கள் பதினைந்து ஆண்டுகளுக்குப்பிறகு இராமநாதபுரம் திரும்ப வேண்டியது தான் !.

இராமநாதபுரம் பயணத்திற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதே நேரத்தில், உட்லண்ட்ஸ் மாளிகையில், தொடர்ந்து பல நாட்கள் இந்த அரசகுமாரர்கள் தங்கள் ஆசான்களுக்கும்,

பணியாளர்களுக்கும், கல்லூரி நண்பர்களுக்கும் விருந்து கொடுத்து மகிழ்ந்தனர். அன்பளிப்புகள் வழங்கினர், அல்லும் பகலும் தாயினும் சாலப்பரிந்து உணவு படைத்து உவந்தவர்கள், கல்விக் கண்களைத் திறந்து இறைவனது வரப்பிரசாதத்திற்குரிய அறிவு ஒளியை ஏற்றி உள்ளும் புறமும் உலகைக் காணச் செய்த உத்தமர்கள் அல்லவோ அவர்கள் !

பிரிந்து செல்ல வேண்டிய நாளும் வேளையும் வந்தது. "பிரிவினும் சுடுமோ" என்பது மகாகவி கம்பனது வாக்கு. அந்த இரு உள்ளங்களை மட்டும் அல்ல, அவர்களுடன் பதினைந்து ஆண்டுகள் பழகிய பெரியவர்களையும் கூட பிரிவு சுட்டது.

வேதனை விரவிய உள்ளத்துடன் அவர்களிடம் பிரியா விடை பெற்றனர். இராமநாதபுரம் வந்து சேர்ந்த பிறகும், பல நாட்களுக்கு பட்டண வாழ்க்கையின் பிம்பம் அரசகுமாரர்களது நெஞ்சத்தில் படிந்து இருந்தன.





# பிரிந்தவர் கூடினர்

சென்னை வாழ்க்கையை முடித்துக் கொண்டு தமையனார் பாஸ்கரருடன் இராமநாதபுரத்திற்கு கி.பி.1888ல் திரும்பினார் தினகர் . அடுத்து பாஸ்கரருக்கு திருமண விழா நடந்தது. தொடர்ந்து அவர் சமஸ்தானத்தின் பொறுப்பையும் ஏற்று சேதுபதியானார் இராமநாதபுரம் அரண்மனையின் காவல் தெய்வமான ராஜ் ராஜேஸ்வரி ஆலய நவராத்திரி விழா, இசை வாணர்கள் கலைஞர்களது கச்சேரிகள், தமிழ்ப் புலவர்கள், சமஸ்கிருத பண்டிதர்களது சொற்பொழிவுகள் என இனிய நிகழ்ச்சிகள் தினகரருக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் களிப்பையும் அளித்தன என்றாலும் நாளடைவில் தமது தமையனாரது கொடை உள்ளமும், திருக்கோயில்களுக்கும், புலவர்களுக்கு, ஏழை எளியவர்களுக்கும் பெருமளவில் பொன்னும் பொருளும் அள்ளி அள்ளி வழங்கி வருவது அவரது

சிந்தனையில் ஒரு சிறு கீறலை ஏற்படுத்தியது. தங்களது முன்னோர்களான சேது மன்னர்களது வழியில் சிறந்த கொடையாளியாக தமையனார் பாஸ்கரன் இருந்து வந்தது தினகரனுக்கு பொறாமையை ஏற்படுத்தவில்லை. ஆனால் வருவாய் சுருங்கிய நிலையில் உள்ள இராமநாதபுரம் சமஸ்தானத்தின் நிதி நிலையைப் பற்றி தினகர் கவலைப்பட்டார். குந்தி இருந்து சாப்பிட்டு வந்தாலே குன்று போன்ற செல்வமும் அழிந்து விடும் என்று உலக வழக்கு இருக்கும் பொழுது வரையற்ற தானம், அளவுக்கு மிகுதியான செலவுகள் சமஸ்த்தான நிர்வாகத்தை நிலை குலையச் செய்து விடும். மன்னரை நம்பியுள்ள மக்கள் மற்றும் தமது தங்கைகள் ஏன் தம்முடைய எதிர் காலம் என்ன ஆவது ?

கி.பி.1893 ஆம் ஆண்டு பாஸ்கரது நாட்குறிப்புகளின் முந்தைய மூன்று ஆண்டுகளில் நாற்பத்து நான்கு லட்சத்திற்கும் மிகுதியான ரூபாய் அளவிற்கு கொடைகள் வழங்கியிருப்பதை குறிப்பிட்டுள்ளது. தினகரது உறவினர்களில் ஒரு சிலரும் நண்பர்களும், தினகரது இந்த சிந்தனை ஓட்டத்தைப் புரிந்து கொண்டார்கள். அவ்வளவு தான் ! அந்தக் குறுமதியாளர்கள் தயாராகி விட்டனர்.

தினகரரது பிஞ்சு மனதில் பேதகமான நஞ்சினைப் பெய்து சகோதர உறவுக்கு ஊறு விளைவிக்கும் வகையில் பிளவை ஏற்படுத்திப் பேருவகை கொள்வதற்கும் ஆயத்தமாகினர். அவர்களது முயற்சி மதுரையிலுள்ள மாவட்ட நீதிமன்றத்தில், இராமநாதபுரம் சமஸ்தான

பாகப் பிரிவினை கோரும் தினகரரது வழக்கு தாக்கல் செய்வதில் முடிந்தது. வழக்கை விசாரித்து தீர்ப்புரை வழங்கிய ஆங்கில நீதிபதி, இராமநாதபுரம் சமஸ்தானத்தின் தொன்மையை விரிவாக விவரித்து ஏனைய இந்து சமயத்தின் சொத்துக்களைப் போன்று பாகப் பிரிவினைக்கு உட்பட்டது அல்ல என்றும், தொன்று தொட்டு தொடர்ந்து வரும் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களது குல முறைப்படி" சேதுபதி பட்டம்" பெறும் நபருக்கு மட்டும் தான் சமஸ்தானம் முழுமையும் சொந்தமானது என்றும் தெளிவாக குறிப்பிட்டிருந்தார். இந்த வழக்கு தாக்கலுக்கு பெரும் முயற்சி செய்த சுயநல மிக்க உதிரிகளுக்கு இந்த தீர்ப்புரை ஒரு பேரிடியாக இருந்தது. இவர்கள் தினகரரது உள்ளத்தில் நம்பிக்கையை நிறைத்து மாவட்ட நீதிமன்றத் தீர்ப்புரையை எதிர்த்து சென்னை உயர்நீதி மன்றத்தில் மேல்முறையீடு செய்ய தினகரரை வலியுறுத்தி வந்தனர். அவர்களது வழிக்கு இணங்கச் செய்தனர். பெரும் தொகையைக் கடனாகப் பெற்று செய்து தாக்கல் செய்யப்பட்ட இந்த முறையீடும் அந்த ஆண்டின் இறுதியிலேயே சென்னை மாநகர உயர்நீதிமன்றத்தினரால் மேல் விசாரணைக்கு தகுதியற்றதாக தள்ளுபடி செய்யப்பட்டது. அப்பாவி தினகரரை ஆட்டிவைத்த சுயநல நரிக்குழுவிற்கு மேலும் ஒரு பேரிடி !. இந்த வழக்குகளினால் ஏற்பட்ட பொருள் இழப்பை தாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்த தினகரருக்கு மீண்டும் அந்தக் கயவர்கள் தேறுதல் கூறி, இன்னொரு இறுதி வாய்ப்பின் மூலம் வெற்றி பெற்றுவிடலாம் என்ற நப்பாசையை ஊட்டி தங்களது

ஜீவியத்திற்கு . வித்திட்டனர் . லண்டனில் உள்ள பிரிவி கவுன்சில் என்ற உச்ச நீதிமன்றத்தில் வெற்றி பெற்று விடலாம் என்று உறுதி சொல்லி பல உதாரணங்களைக் காட்டினர்.

மன்னர் பாஸ்கரர் தமது தம்பியின் நேர்மையற்ற தவறான போக்கு பற்றி ஏற்கனவே தமது நாட்குறிப்பில் மிகுந்த வருத்தமுடன் வரைந்திருந்தார் . இப்பொழுது தீயவர்களது தூண்டுதலில் தம்பி மேலும் கடனாளியாக சிரமப்படவிருப்பதை தவிர்ப்பதற்கும் அவரைச் சூழ்ந்திருக்கும் சுயநலக் கூட்டத்திலிருந்து அவரைவிடுவிப்பது பற்றியும் ஆழமாகச் சிந்தித்தார் . தம்பி தினகரரது இளம் உள்ளத்தில் ஏற்பட்ட நியாயமான பயத்தையும் அதனால் அவர் வழக்கு மன்றம் சென்று தனக்கு எதிராக தீர்ப்புரை பெற முயன்றதையும் மன்னர் பெரிதுபடுத்தி வெறுப்புணர்வு கொள்ளாமல் இந்தப் பிரச்சனைக்கு எவ்விதம் தீர்வு காணலாம் என்பதையே எண்ணி எண்ணி வருத்தப்பட்டார். முடிவான தீர்வு ஒன்றையும் விரைவில் கண்டார். என்ன இருந்தாலும் இளம் தினகர் அவருடன் பிறந்த தம்பியல்லவா ? தனது திவான் ராஜராம் ராவ், மூலம் தம்பிக்குச் செய்தி அனுப்பி நேரில் அவரை சந்திக்குமாறு செய்தார். தமையனும் தம்பியும் சந்தித்தனர். கலந்துரையாடலில் இருவரும் மனம் விட்டுப்பேசினர். பாசமும் பற்றும் இணைந்த இருவரது சிந்தனையும் ஒரு முகமாகச் செயல் பட்டதால் அவர்கள் எளிதில் ஒரு நல்ல முடிவுக்கு வந்தனர். தம்பியின் அனாவசியமான பயத்தைப் போக்கும் வகையில் அவரது வாழ்வுக்கு வழி வகுத்துக்

கொடுத்தார். தினகரருக்கு தனியாக மாளிகையொன்று அமைத்துக் கொள்வதற்காக ரூபாய் ஐம்பதினாயிரமும் அளித்தார். மேலும் அந்த மாளிகையின் பராமரிப்பிற்கும் தினகரரது சொந்தச் செலவுகளுக்குமாக மாதந்தோறும் ரூபாய் இரண்டாயிரம் மட்டும் இராமநாதபுரம் சமஸ்தானக் கருவூலத்தில் இருந்து பெற்றுக்கொள்வதற்கு ஆணையும் பிறப்பித்தார்.

உடன் பிறப்புக்களது உள்ளத்தின் மூலையில் ஒட்டியிருந்த வெறுப்பும், துவேசமும் உதிர்ந்து விட்ட சருகுகள் போல மறைந்து ஒழிந்தன.

அன்பென்னும் பிடியில் அகப்படாதார் யார் உளர்? அதிலும் மிகப்பெரிய சிந்தனைச் செல்வரும் சிந்தாந்தியுமான பாஸ்கரசேதுபதி மன்னரது வாஞ்சை நிறைந்த இந்தச் செயல் அவர்களது குடும்பப் பெருமையை நிலைநாட்டியது பண்பட்ட செயலாகப் போற்றப்பட்டது.

இராமநாதபுரம் கோட்டைக்கு கிழக்கே ஒரு கல் தொலைவில் வளைந்து செல்லும் சிற்றாறு சூழ்ந்து கிழக்கு எல்லையாகக் கொண்டதும் மரம், செடி, கொடிகள் அடர்ந்து பசுமை கொழிக்கும், சன்மார்க்கத்தைப் போதித்த துறவி தாயுமானவர் யோக நிலையில் பல காலம் இருந்து சமாதி பெற்ற தலமும் அண்மையில் உள்ளது. இந்தப் பகுதியில் ஆன்மிக வாழ்க்கையில் சிறந்து விளங்கிய இஸ்லாமியத்துறவிகள் அடக்கம் பெற்று உள்ளனர். அந்தப் பகுதி மனத்திற்கு இனிமையையும் மட்டற்ற தனிமைக்கு மகிழ்ச்சியையும் ஏற்ற இடமாக இருப்பதை அறிந்து அங்கு தமது கட்டிடப் பணிகளைத்

தொடங்கினார் தினகரர் .

ஐரோப்பிய நாட்டு கோதிக் பாணியில் தினகரரது மாளிகை விரைவில் கம்பீரமாக எழுந்தது தென்றல் தவழ்ந்து வரும் தெற்கு திசையில் சம சதுர வடிவில் மூன்று தலைவாயில்களையும் கிழக்கிலும் மேற்கிலும் இரு வாயில்களையும் கொண்டதாக அந்த மாளிகை நிர்மாணிக்கப்பட்டது. வாசல்களும், ஜன்னல்களும். மிகப்பெரியதாகவும் மேல்புறம் வளைவுகளாக இல்லாமல் குதிரைக் குளம்பு வடிவில் அமைக்கப்பட்டு ஒரு புதிய மாளிகையை ஏற்படுத்தப்பட்டது. இந்த மாளிகையைச் சுற்றி கண்ணுக்கெட்டிய தொலைவு வரை வண்ண மலர்ச்செடி கொடிகளின் மாட்சியும் காட்சியும் பொலிந்து விளங்கின. இனிது இனிது ஏகாந்தம் இனிது என இயம்பும் வண்ணம் இந்த மாளிகை அமைதிச் சூழலில் அமைந்தது. விரைவிலேயே மங்கள நாண் அணிந்த மணப்பெண்ணுடன் தினகரது இல்லற வாழ்வு அங்கு தொட்ங்கியது. நற்குடிப்பிறந்த நங்கையை தினகர் தமது வாழ்க்கைத் துணைவியாக ஏற்றார். அவரது பெயர் சேதுமுத்து நாச்சியார் என்பதாகும். முதுகுளத்தூர் வட்டம் கருமல் என்ற கிராமத்தின்பெருந்தனக்காரரது ஒரே பெண் அவர்.

இல்லறம் அல்லது நல்லறம் அன்று என்ற மூதுரைக்கிணங்க இந்த இளம்தம்பதியரின் இல்லறம் தொடர்ந்தது. ஆனால் இதே மனமாட்சியின் மறு உருவான மக்கட்பேறு எய்தாதது வேதனையை வார்த்தது. இதைவிட இன்னும் வேதனைமிக்க செய்தி, தமையனார் மன்னர் பாஸ்கர சேதுபதி காலமான போது அவரது

இறுதிச் . சடங்குகளில் தினகர் சேதுபதி கலந்து கொள்ள இயலாமல் போன அவலம்.

காரணம் தமது மாளிகை கட்டுமானம் சம்பந்தமாக அவர் சென்னையில் இருந்தார்.





# திவான் பதவியில்

இராமநாதபுரம் சமஸ்தானப் பொறுப்புகளை சமஸ்தான திவான் தலைமையிலான குழு ஒன்றிடம் ஒப்படைத்துவிட்டு மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்கள் ஆன்மீகத் தொண்டுகளில் மிகுதியான நேரத்தைச் செலவழித்து வந்தார். மிகப்பெரிய வேதாந்தியான அவரது உள்ளத்தில் அமைதி இல்லை. முந்தையபன்னிரண்டு ஆண்டுகளில் பாடிவந்த புலவர்களுக்கும் நாடிவந்த நலிவுற்றோருக்கும் ஈந்து உவந்த வந்த இரு கரங்களுக்கு இப்பொழுது பெரும்பாலும் வேலை இல்லை. குன்றனைய செல்வம் குன்றிவிட்ட பிறகு கொடைக்கு வழி ஏது? இல்லையென்ற சொல்லைச் சொல்வதற்குப் பயந்த மன்னர் ஏகாந்தத்தை நாடினார்.

அதே ஆண்டில் இறுதி வாக்கில் தமது மனைவி சிவகாமிசுந்தரி நாச்சியாருடன் மாமனார் ஊர்க்காடு ஜமீன்தார் மாளிகைக்கு சென்று

இருந்தார். அங்கும் அவருக்கு தேவையான மனஅமைதி ஏற்படவில்லை. அந்த ஜமீனை ஒட்டிச் செல்லும் தாமிரபரணி ஆற்றின் எதிர்க்கரையில் இருந்த கல்லிடைக்குறிச்சி திருவாடுதுறை திருமடத்திற்குச் சென்றார். அங்கு இவருக்கு தேவையான அமைதி கிடைத்தது. பூஜை, பாராயணம் போன்ற நிகழ்ச்சிகளில் ஒன்றியிருந்த அவரது முதுகில் (ராஜா பிளவை) கட்டி ஒன்று தோன்றி உபாதையளித்துக் கொண்டிருந்தது. அதனைப்பற்றிய சிந்தனையே இல்லாமல் தெய்வ சிந்தனையை மட்டும் மூழ்கி இருந்த அவருக்கு திடீரென 27-12-1903ம் தேதி முற்பகல் மரணம் ஏற்பட்டது. அவரது சடலம் இராமநாதபுரம் கொண்டு வரப்பெற்று 30-12-1903ல் ராஜமயானத்தில் தகனம் செய்யப்பட்டது.

அப்பொழுது சென்னையில் இருந்த தினகரருக்கு தந்தி மூலம் செய்தி தெரிவிக்கப்பட்டது. போக்குவரத்து வசதிகள் இல்லாத அந்தக் காலத்தில் சென்னையில் இருந்து இராமநாதபுரத்திற்கு நேரடியான ரயில் போக்குவரத்து கிடையாது. சென்னையிலிருந்து புறப்படும் ரயில் ஈரோடு வழியாக மதுரை வந்தடைய இருநாட்கள் ஆகும். பின்னர் மதுரையில் இருந்து குதிரை பூட்டப்பட்ட கோச்சில் இராமநாதபுரம் வந்து சேர இரு நாட்கள் ஆகும். இவ்விதம் மிகவும் தாமதமாக வந்து சேர்ந்த இளவல் தினகர், தயரதச் சக்கரவர்த்தியை இழந்த அயோத்தி மாநகரம் போன்று மீளாத சோகத்தில் இராமநாதபுரம் மூழ்கியிருப்பதை உணர்ந்தார். மிகப்பெரிய வேதாந்தியாக, சிறந்த மேதையாக, வரையாது வழங்கிய வள்ளலாக, வாழ்ந்த தமது தமையனாரை

மரணம் ஆட்கொண்டதை உணர்ந்தபொழுது தினகர் துயரத்தில் சிறிது காலம் மூழ்கி இருந்தார். "ஊழிற் பெருவலியாவுள" என்ற வள்ளுவம் அவருக்கு ஆறுதல் அளித்தது.

முடி சார்ந்த மன்னரும் முடிவிலொரு பிடி சாம்பலாவர் என்பதையும் உணர்ந்தவர்தானே அவர்.

கணவரை இழந்த அரச பிராட்டிகள், தந்தையை இழந்த மக்கள் ராஜேஸ்வர முத்துராமலிங்கம், ராஜராம் பாண்டியன் இவர்களுக்கு ஆறுதல் சொல்வது யார்? இவைகளுக்கெல்லாம் மேலாக ஸ்தம்பித்து நின்றது சமஸ்தான நிர்வாகம். சேதுபதி மன்னராகப் பட்டம் சூட்டிக் கொண்ட இளைஞர் முத்து ராமலிங்க சேதுபதிக்கு திவானாக கௌரவப் பொறுப்பை ஏற்று சமஸ்தான செயல்பாடுகளுக்கு உதவி வந்தார் தினகர் . அனுபவமும் ஆற்றலும் மிக்க இந்த சேவையை தமது தமையனாருக்குச் செய்யும் ஆற்றலும் நன்றிக் கடனாகப் பல ஆண்டுகள் தொடர்ந்து செய்து வந்தார்.

என்றாலும், தமையனாருடன் இளமைக்காலம் தொட்டு சென்னையில் ஒன்றாகப் பயின்றது , பயனுள்ள காலமாக பதினைந்துஆண்டுகள் சென்னையில் கழித்தது, ஆங்கில, தமிழ், சமஸ்கிருதம் ஆகிய மொழி இலக்கியங்களைக் கற்றுக் தெளிந்தது. ஓவியக் கலையில் உன்னதமான தேர்ச்சி பெற்றது. அதே போல ஆங்கில இசையில் மூழ்கித் திளைத்ததுடன் தமையனார் பாஸ்கரருக்கும் போட்டியாக பியானொ இசைக் கருவியை மீட்டிக் கேட்போர் இதயத்தை ஈர்த்து இழுத்து இசை நயத்தில் திக்குமுக்காடச் செய்து மகிழ்தல் இப்படி

சென்னை வாழ்க்கையில் உடன் பிறந்த தமையனாருடன் ஒன்றிக் கழித்த நாட்கள் அவரது உள்ளத்தில் அலைகள் போல எழுந்து மறைந்தன. இன்னும் இராமநாதபுரத்தில் சிறப்பான நிகழ்களுடன் மன்னர் பாஸ்கரர் முடிசூட்டுவிழா, நவராத்திரி விழா, திருஉத்திரகோசமங்கையர் கோயில் விழா சிருங்கேரி பீடாதிபதி வரவேற்புடன், சுவாமி விவேகானருக்கு வரவேற்பு இதழ் வாசித்து அளித்ததும் ஆகும்.

அமெரிக்க நாட்டு சிகாகோ நகரில் நடைபெற்ற சர்வ சமய மாநாட்டில் இந்தியப் பிரதிநிதியாக கலந்து கொண்ட **சுவாமி விவேகானந்தர்** தாயகம் திரும்பும் வழியில் இராமநாதபுரத்திற்கு 25.1.1897ல் வருகை தந்தார். சுவாமிகளை தமது சொந்தக் செலவில் மன்னர் பாஸ்கர சேதுபதி சிகாகோவிற்கு அனுப்பி வைத்தவர் அல்லவா ! இந்திய நாட்டிற்கும் பேரும், புகழும் ஈட்டுவதற்குக் காரணமாக இருந்த மன்னர் பாஸ்கர சேதுபதி தமக்குச் செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் சுவாமிகள் இலங்கை யாழ்ப்பாணத்தில் இருந்து முதலில் இந்திய மண்ணில் இராமநாதபுரம் மன்னருக்குச் சொந்தமான பாம்பன் துறைமுகத்தில் கரையிறங்கினார். மன்னர் பாஸ்கர சேதுபதியும் சமஸ்தான மக்களும் அளித்த வரவேற்பை ஏற்று ஆசி வழங்ய பிறகு மூன்று நாட்கள் மன்னரது பாம்பன் மாளிகையில் தங்கி மன்னருடன் ஆன்மீக விசயங்கள் பற்றி அளவளாவிய பிறகு இராமேஸ்வரம் திருக்கோயிலை தரிசித்த சுவாமிகள் இராமநாதபுரம் சமஸ்தானத்தில் மற்றொரு ஆலயமான திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப் பெருமாள் ஆலயத்தையும் தரிசித்தார். அங்கிருந்து இரட்டை

மாட்டு வண்டியில் ராஜசூர்யமடை கிராமம் வரை வந்த பிறகு அங்கிருந்து சக்கரக்கோட்டைக் கண்மாயைப் படகு மூலம் கடந்து, கண்மாயின் வடக்குக் கரைக்கு (இராமநாதபுரம் நகர்) வந்து சேர்ந்தவுடன் மன்னர் பாஸ்கர சேதுபதியின் ஏற்பாட்டின் படி சுவாமிகளை மன்னரது பிரதிநிதியாக தினகர் வரவேற்று அலங்காரப் பல்லக்கில் அமரச் செய்து, வாண வேடிக்கைகளுடன் ஊர்வலமாக இராமநாதபுரம் சங்கர விலாஸ் மாளிகைக்கு அழைத்து வந்தார்.

சுவாமிகள் களைப்பு நீங்க சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்ட பிறகு மன்னரும் இராமநாதபுரம் நகர் மக்களின் சார்பாக வரவேற்பு இதழ் ஒன்றை வாசித்து அளிக்கும் வாய்ப்பினை தமது இளவலுக்கு பாஸ்கர சேதுபதி மன்னர் அளித்தார். கல்வியிலும் வயதிலும் முதிர்ந்த, பாஸ்கரர் தினகர் ஆகியோரது உடன் பிறவாத சகோதரர் **வள்ளல் பாண்டித்துரைத் தேவர்,** மன்னரது ஆசானும் நண்பருமான **மகாவித்வான் ரா.ராகவஐயங்கார் சமஸ்தான இசைப்புலவர் பூச்சி சீனிவாச ஐயங்கார்** போன்ற மேதைகள் இந்த வரவேற்பு விழா எற்பாடுகளில் பங்கு கொண்டு இருந்ததும் இந்த வாய்ப்பு அவர்களுக்கு கொடுக்கப்படவில்லை .

இந்த வரவேற்பு இதழ் ஆங்கிலத்தில் தினகர் அவர்களால் வரையப்பட்டு ஒரு அழகிய வெள்ளிப் பேழையில் வைத்து மிகுந்த மரியாதையுடன் வழங்கும் வாய்ப்பு இவருக்கு கிடைத்தது. ( இந்த வரவேற்பு இதழில் நகல் பிண்ணிணைப்பில் கொடுக்கப்பட்டது.

மேலும் மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்கள் இறந்த பிறகு மிகப் பெரிய துன்பம் ஏற்பட்டது. இராமநாதபுரத்தில் சமஸ்தானத்தின் கௌரவ திவானாக பணியாற்றிய போதிலும், அவரது வாழ்க்கையிலே எந்த விதமான ஈர்ப்போ அல்லது பிடிபாடோ இல்லாத நிலையில் வாழ்க்கை கழித்து வந்தது .

மேலும் அவரது பெரும்பாலான நேரத்தை பியானோ இசைத்தும் பாடுவதிலும், ஆங்கிலத்தில் கவிதை இயற்றுவதிலும் செலவழித்து வந்தார். சில வேளைகளில் வெளியூர்களிலிருந்து வந்து தம்மைச் சந்திக்கும் தமிழ்ப்புலவர்களுடன், வடமொழி வித்தகர்களுடன், அளவலாவுவதும் அவர்களுக்கு தக்க சன்மானம் அளித்து அரண்மனை மரியாதையுடன் அனுப்பி வைக்கும் பழக்கமும் அவரிடமிருந்தது . மன்னர் பாஸ்கர சேதுபதி இல்லாத குறையை இவர் இவ்விதம் நிவர்த்தி செய்து வந்தார் என்றால் மிகையாகாது . இது தவிர குதிரைகளை வளர்த்து பராமரிப்பதிலும் கவனம் செலுத்திவந்தார் . இளமையிலிருந்தே குதிரைகள் மீது இவருக்கு ஒரு அலாவதியான பற்று இருந்து வந்தது .

அவரது இளமைப்பருவம் சென்னையில் கழிந்தது என்பதை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம் . சென்னையில் அவருக்கு வாழ்க்கைக்கல்வியில் போதனையும் பயிற்சியும் அளித்த ஆங்கில நாட்டு ஆசான்கள், அவருக்கு சிறந்த அரபிக் குதிரைகளை அடக்கிச் சவாரி செய்வது எவ்வாறு என்பது மிகத் தெளிவாகக் கற்றுக் கொடுத்து இருந்தனர் . அரசகுமாரர்களுக்கு குதிரை ஏற்றம் தெரிந்து இருக்க வேண்டும் என்பதை வழிவழியாக வந்துள்ள நியதி

அல்லவா ? குதிரையில் சவாரி செய்யும் பொழுது அவர் தலையில் அணிந்திருந்த தொப்பியோ அல்லது வேறு சிறு பொருட்களோ அவரிடமிருந்து கீழே விழுந்து விட்டால் , அதனை சிரமமில்லாமல் மிகவும் லாகவமாக , குதிரையின் வேகத்தைக் குறைக்காமலேயே கையிலுள்ள சவுக்கு மூலம் மிக எளிதாக அந்தப் பொருளை எடுத்து விடுவது அவரது அரிய பழக்கமாயிருந்தது .

இவர் குதிரை சவாரி செய்வதை மிகவும் உன்னிப்பாக கவனித்து வந்த ஆங்கிலேய அலுவலர்கள் அவரது திறமையை வெகுவாகப் பாராட்டியுள்ளனர். அத்துடன் இராமநாதபுரம் கோட்டையில் அப்பொழுது நிலை கொண்டு இருந்த ஆங்கில அரசின் நான்கு குதிரைப்படை அணிகளில் ஒரு அணிக்கு, அவரை கௌரவத் தலைவராக அன்றைய அரசாங்கம் நியமனம் செய்து சிறப்பித்தது. பகதூர் என்ற பட்டத்தையும் குதிரைத்தளபதிக்கான அழகான ஆடம்பரச் சீருடையையும் ஆங்கிலஅரசு அளித்து கௌரவித்தது.

பல்நூற்றாண்டுகளாக குதிரைகள் அரசியல் சமுதாய வாழ்வில் சிறப்பான இடம் பெற்று இருந்ததைப் புராணங்களிலும் , இதிகாசங்களும் எடுத்துரைக்கின்றன. வேதகால ஆரியர்கள் குதிரைகளை யாகத்தின் பொழுது பலியிட்டனர் என்ற செய்தியுள்ளது . மன்னரது வீரபராக்கிரமத்தை நிலை நாட்ட குதிரையை வைத்து அசுவமேத யாகம் நடத்தப்பட்டது . யாக முடிவில் அலங்கரிக்கப்பட்ட அந்தக் குதிரை நாடு முழுவதும் வெற்றி உலாவாக அழைத்துச் செல்லப்பெற்றது இராமாயணத்தில் பிற்பகுதியான உத்திரகாண்டம்

இராமபிரானது அசுவமேதயாகத்தையும், அந்த யாகத்தின் முடிவில் வெற்றி உலா புறப்பட்ட குதிரையை மடக்கிப் பிடித்துக் கட்டிய லவ, குச சகோதரர்களைப் பற்றியும் விவரிக்கின்றன .

ஆனால் இந்தச் குதிரைகள் நமது நாட்டில் பல்கிப் பெருகவில்லையென்பதும், அரேபியா போன்ற நாடுகளில் இருந்து வரவழைக்கப்பட்டன என்பதையும் இலக்கியங்களும், வரலாறும் தெளிவுபடத் தெரிவிக்கின்றன.

தமிழகத்தைப் பொறுத்த வரையில் குதிரையைப்பற்றிய குறிப்பு சங்க இலக்கியமான பொருநர் ஆற்றுப்படையில் காணப்படுகிறது . தகடூரைத் தலைமையிடமாகக் கொண்டிருந்த வள்ளல் அதிகமானது மலைகளில் ஒன்று குதிரை மலை என்பதும் தெரியவருகிறது. மற்றும் தமிழ் மன்னர்களது நால்வகைப் படைகளில் ஒரு அங்கமாக குதிரைப்படையும் இருந்தது . அரசகுமாரர்கள் கற்றுத் தேர்ச்சி பெற வேண்டிய கல்வியில் நான்கு வேதம், ஆறு சாஸ்திரம், அறுபத்தி நான்கு கலைகளில் ஒன்றாக "குதிரைஏற்றம்" ஒரு கலையாக இருந்து வந்தது.

மதுரையில் மன்னர் அரிமர்ததனுக்காக கிழக்கு கடற்கரை சென்று அரபு நாட்டுக்குதிரைகளை வாங்க பாண்டியனிடம் பொன்னைப் பெற்றுச் சென்ற மாணிக்க வாசகரை திருப்பெருந்துறையில் ஆளுடையப்

பரமசுவாமிக்கு அந்தப் பொன்னைக் கொண்டு திருப்பணி செய்தார் என்பது எட்டாம் நூற்றாண்டு வரலாறு பரஞ்சோதி முனிவர் தன் திருவிளையாடற்புராணத்தில், அரபு நாட்டில், மக்கம் போன்ற நகரங்களில் குதிரைகள் கிடைப்பதையும், குதிரைகளின் இனம், வகை, குண நலன்கள் ஆகியவை பற்றி நரியை பரியாக்கிய படலத்தில் விவரமாகப் பாடியுள்ளார். தொடர்ந்து இந்த சிறப்பான வகைக் குதிரைகள் கி.பி.பதினான்காம் நூற்றாண்டில் முற்பகுதி வரை பாண்டிய நாட்டில் காயல்பட்டிணம், பெரியபட்டிணம், தேவிப்பட்டிணம், ஆகிய மூன்று துறைமுகங்களில் ஆண்டு தோறும் பதினாயிரம் குதிரைகள் இறக்கப்பட்டதை வரலாற்று ஆசிரியர் வஸ்ஸாபும், மார்க்கோபோலோவும் வரைந்துள்ளனர் . இவ்விதம் பெரியபட்டிணம் துறையில் கரை இறக்கப்பட்ட குதிரைகள், பாண்டியனது தலைநகரான மதுரைக்கு வழி நடத்திச் சென்ற பாதை, இன்னும் "குதிரை வழிக்காடு" என வழங்கப்படுவது இங்கு குறிப்பிடத்தக்கது.

இந்தக் குதிரைகளை கொங்கு நாட்டு மலை மண்டலம் வழியாக மேற்குக் கடற்கரையிலிருந்து கொண்டு வந்து விற்ற வணிகர்கள் "குதிரைச்செட்டிகள் " என வழங்கப்பட்டதை கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இந்தக் குதிரைகளுக்கு ஏற்படும் பிணிகளைத் தீர்க்கவும், அரபு நாட்டில் இருந்து யூனானி வைத்தியர்கள் குதிரைகளுடன் வர வழைக்கப்பட்டனர் என்பது தெரிய வருகிறது .

தினகரின் குதிரையென்று நோய் வாய்ப்பட்டு ஒரு நாள் மடிந்த பொழுது அவர் அடைந்த சோகத்திற்கு அளவே இல்லை என்று தான் சொல்ல வேண்டும். இறந்த அந்தக் குதிரையின் உடலை மிக உயர்ந்த பட்டாடைகளால் போர்த்தி அவரது மாளிகைக்குக் கிழக்குப் பகுதியில் அடக்கம் செய்தார். பின்னர் அந்த இடத்தில் ஒரு கல்லறையையும் அமைத்து ஆறுதல் அடைந்தார்.





# சேதுநாட்டு தேசிங்குராஜா

தமிழ் நாட்டில் பேரரசர்களும் சிற்றரசர்ககளும் அவர்களது அந்தஸ்திற்கு ஏற்றாற் போல குதிரைகளை வைத்து வளர்த்து பராமரித்து வந்தனர். பத்தொன்பதாவது நூற்றாண்டில் இறுதியில் தஞ்சாவூர், புதுக்கோட்டை, இராமநாதபுரம் மன்னர்களது மாளிகைகளில் மட்டும் சிறந்த குதிரைகள் காணப்பட்டண. ஒரு நாள், ஒரு குதிரை வியாபாரி இரு அரபு நாட்டுக் குதிரைகளை இராமநாதபுரம் சேதுபதி மன்னரது அரண்மனைக்குக் கொண்டு வந்தார். அரபு நாட்டுக் குதிரைகளுக்கே உரிய களையுடன் அந்தக் குதிரைகள் அழகாக இருந்தன. உரிய விலையைக் கொடுத்து மன்னர் பாஸ்கர சேதுபதி அவைகளை வாங்கி தமது அரண்மனை குதிரை லாயத்தில் சேர்ப்பித்தார்.

இரு நாட்களுக்குப் பிறகு, அந்த குதிரைகளில் முழுவதும் கறுமை நிறமாக இருந்த குதிரை மட்டும் அரண்மனை பணியாளர்களுக்கு அடங்காமல் அடம் பிடித்து வந்தது. அதனைக் கட்டுப் படுத்தும் அவர்களது முயற்சி பயனற்றுப் போனதால், அவர்கள் மன்னர் பாஸ்கர சேதுபதியிடம் விவரத்தை தெரிவித்தனர் .

பீட்டன் வண்டியில் பூட்டுவதற்கும், சவாரி செய்வதற்கும், உடன்பட்டு ஒத்துழைக்க மறுத்து வந்த இந்தக் குதிரைக்கு பேய் பிடித்து இருப்பதாகவும், அதனை வைத்துக் கொள்வது சரியல்லவென்றும் தெரிவித்தனர்.

பணியாளர்கள் பேச்சில் நம்பிக்கை கொள்ளாத மன்னர் பாஸ்கர் சிறிது நேரம் யோசித்து விட்டு அதனை தமது இளவல் தினகரரிடம் அழைத்துச் சென்று ஒப்புவிக்கும்படி சொன்னார்.

அரண்மனைப் பணியாளர்களிடம் அந்தக் குதிரையைப் பற்றிய விவரங்களைக் கேட்டறிந்த தினகரர் அரண்மனைக் குதிரை லாயம் சென்று குதிரையைப் பார்த்தார். பளபளவென கறுமை நிறத்துடன் இருந்த அந்தக் குதிரை அவருக்கு மிகவும் பிடித்து இருந்தது. அதன் அருகில் சென்று அதன் கழுத்தில் கை வைத்து தடவிச் கொடுக்க முயன்றார். அவ்வளவு தான் ! அந்தக் குதிரைக்கு கோபம் வந்து விட்டது. தலையை ஆட்டி, பல்லைக் காட்டிக் கனைத்தது.

தினகரருக்கு புரிந்து விட்டது. இது வரை யாரும் அதனை சவாரியில் பழக்கப்படுத்தவில்லை. அதனால் குதிரை தம்மைத் தொடுவதற்கு கூட அனுமதிக்க மறுக்கிறது. அடுத்த நாள் அதனை ஓட்டிச்சென்று அடக்குவதாகச் சொல்லிச் சென்று விட்டார்.

மறு நாள் காலையில், இராமநாதபுரம் அரண்மனையின் தெற்குப் பகுதியில் அமைந்து இருந்த குதிரை லாயத்தின் முன்பு அரண்மனைப் பணியாளர்களும் பொதுமக்கள் சிலரும் கூடி இருந்தனர் . பேய்க் குதிரையை தினகர் அடக்குவதைக் பார்க்க. சிறிது நேரத்தில் தினகரும் அங்கு வந்தார். ஆங்கிலேயக் குதிரை வீரன் போல அழகிய வண்ண சட்டையும், வெள்ளை நிற கால் சட்டையும் பூட்சுகளும் அணிந்து மிகவும் சிரமப்பட்டு குதிரையின் கடிவாளத்துடன் பிணைக்கப்பட்ட நீண்ட கயிற்றை தினகரிடம் கொடுத்தனர் .

கடிவாளக் கயிற்றைப் பெற்றுக் கொண்ட தினகர். குதிரையை லாயத்தை விட்டு வரச் செய்வதற்கு கயிற்றை இழுத்தார். குதிரை வர மறுத்தது.

குதிரை அருகில் சென்று, அதன் முதுகில் தட்டிக் கொடுத்து கொண்டு இருக்கும் பொழுது திடீரெனத் தாவி அதன் மீது அமர்ந்து கடிவாளத்தை இறுக்கிப் பிடித்தார். கூட்டத்தினரை விலகி நிற்குமாறு சொல்லிவிட்டு சவுக்கினால் குதிரைக்கு இரண்டு சொடக்கு விட்டார். குதிரை கோபத்துடன் அவரைக் கீழே தள்ளி விடத் திமிறியது. கடிவாளத்தை இறுக்கமாகப் பிடித்து

குதிரையின் இரு விலாப்புறத்திலும் இரு முன் கால்களால் அழுத்தி குதிரையை அங்கிருந்து ஓடுமாறு செய்தார். கூடியிருத்தவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தனர். தினகரது குதிரையை நான்கு குதிரை வீரர்கள் பின் தொடர்ந்தனர். திமிறிக்கொண்டு ஓடிய அந்தக் குதிரையை வீரர்கள் மேற்கு நோக்கி ஓடுமாறு விரட்டினர். சிறிது தூரத்தில் உள்ள பெரிய அய்யனார் கோயிலுக்கு முன்னால் அன்றைய மழையினால் வதியாக கிடந்த களிமண் பகுதிக்கு அதனை ஓட்டிச்சென்றார். ஈரமாக இருந்த அந்தக் களிமண் தரையில் சுற்றி வருமாறு விரட்டி ஓட்டினார். ஏறத்தாழ இரண்டு மணி நேரம், அதுவரை மேட்டிலும், மணலிலும் கடந்து ஓடிய அந்தக் குதிரைக்கு இது ஒரு சிரமமான சோதனையாக இருந்தது.

சுற்றிச் சுற்றி ஓடி வந்த அந்தக் குதிரை களைத்து சோர்ந்து போயிற்று. காலையில் புல்லோ கொல்லோ எதுவும் உட்கொள்ளாமல் ஓடி வந்ததால் குதிரைக்கு பசியும் களைப்பும் வருத்தியது. கோடை காலம் வெய்யிலின் உக்கிரம், எல்லாம் சேர்ந்து குதிரையைத் தள்ளாட வைத்தது. சிறிதும் களைப்படையயாத தினகர், குதிரையை மேலும் வருத்த விரும்பவில்லை.

களிமண் தரையில் சுற்றிச் சுற்றி வருமாறு செய்த தினகர் கடிவாளத்தின் இறுக்கத்தை தளர்த்தி அதனை சற்று நிறுத்தினார் . பேய் போல அதனைப் பற்றி இருந்த திமிர், முரண்டு, பிடிவாதம் எல்லாம் பறந்து போயிற்று சிறிது மூச்சு வாங்கி தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டது. தினகர் அதன் கழுத்தில் தட்டிக்

கொடுத்தார். இப்போழுது குதிரை எவ்வித சேட்டையும் செய்யாமல் மவுனமாக நின்றது.

தினகரது முயற்சி வெற்றி பெற்றதால் அவரும் உள்ளூர மகிழ்ச்சியடைந்தார் .

சில நிமிடங்கள் கழித்து, தினகரது குதிரைக்கு முன்னும் பின்னும் நான்கு குதிரைகளும் வீரர்களும் ஓடி மெதுவாக நகர் நோக்கி வந்தனர்.

செஞ்சிக்கோட்டை, தேசிங்கு ராஜன், டில்லி பாதுஷாவிடம் இருந்து முரட்டுக் குதிரையை மடக்கி அடக்கி வசியப்படுத்தியதைப் போல தினகர் பேய்க்குதிரையைக் அடக்கியதை மக்கள் மிகுந்த மகிழ்ச்சி பொங்கப் பெருமையாகப் பேசினர்.

சேது நாட்டு தேசிங்கு ராஜன், தினகர் சேதுபதி





# குறி தவறாது

வெடிமருந்தும் துப்பாக்கியும் நமது நாட்டிற்கு முதன் முதலில் கி.பி.1502ல் தூத்துக்குடிக்கு வந்து சேர்ந்த போர்ச்சுகீசியரால் கொண்டு வரப்பட்டன. அவர்களில் வணிகக் கப்பல்களின் பாதுகாப்பிற்காக அவைகளை அந்தக் கப்பல்களில் வைத்திருப்பதாகச் சொல்லப்பட்டது. இவை இந்திய நாட்டு போர்க்களத்தில் - தில்லிக்கு அண்மையில் உள்ள பாணிபட் போரில் இந்தியாவில் முகலாய மன்னர் ஆட்சியை ஏற்படுத்திய பாபரினால் கி.பி.1526ல் பயன் படுத்தப்பட்டன. இவரது பீரங்கிகள் வெடித்து இபுராகீம்லோடியின் படைகளுக்கு பெரும் சேதம் விளைவித்ததனால் பாபர் வெற்றி பெற்றார்.

தமிழகத்தில் கி.பி.1751ல் கர்நாடக நவாப் பதவிக்கு போட்டியிட்ட வாலாஜா முகம்மது அலியும்

சந்தாசாகிபும் முறையே ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியார் பிரஞ்சு இந்திய கிழக்கு இந்தியக் கம்பெனியார் ஆகியோரது கூலிப் படைகளது உதவி பெற்று நடத்திய போர்களில் பீரங்கிகளும் துப்பாக்கிகளும் பயன்படுத்தப்பட்டன. வெடிமருந்தும் துப்பாக்கிகளும் தான் 18 ஆம் நூற்றாண்டுப் போர்களில் வெற்றி தோல்விகளை நிர்ணயிக்கும் ஆயுதங்களாகி விட்டன.

இவ்விதம் தமிழகத்திற்கு முற்றிலும் புதுமையான துப்பாக்கி, அரசாங்கத்தின் பயன்பாட்டில் மட்டும் இருந்தது துப்பாக்கியைத் தினகரது சென்னை வாழ்க்கையின் கற்றுக் கொண்டது ஒரு தற்செயலான நிகழ்ச்சியாக அமைந்தது.

ஒரு நாள் தினகர் கல்வி கற்பதற்காக தங்கியிருந்த உட்லண்டஸ் மாளிகைக்கு அவருக்கு பாடம் சொல்லத்தக்க ஆங்கிலேயேர் ஒரு வரைச் சந்திக்க அவரது நண்பர் ஒருவர் வந்தார். அவரும் ஆங்கிலேயர். சென்னைக் கோட்டையில் பாதுகாப்பு பணியில் அமர்த்தப்பட்டு இருந்தவ. அப்பொழுது அவரது கையில் இருந்த நீண்ட குழாய் போன்ற கருவியை உற்றுக் கவனித்த இளம் தினகர், அந்தக் கருவி பற்றி தெரிந்து கொள்ள மிகவும் ஆசைப்பட்டார். அந்தப் பிரமுகரிடம் அடுத்தடுத்த பல கேள்விகளைக் கேட்டு அந்த "துப்பாக்கி" என்ற ஆயுதத்தை பற்றி தெரிந்து கொண்டார்.

அந்தப் பிரமுகர் அங்கிருந்து சென்றவுடன் தானும் அந்த ஆயுதத்தில் தேர்ச்சி பெற வேண்டும் எள்ற ஆசையைத் தனது ஆசானிடம் தெரிவித்தார். அடுத்த

சில நாட்களிலேயே தினகருக்கு துப்பாக்கியைக் கையாளுவது பற்றிய பயிற்சி முறையாகக் கொடுக்கப்பட்டு சிறப்பான தேர்ச்சியும் பெற்றார். ஆங்கில நாட்டு நாடோடிக் கதைகளில் சிறப்பித்துக் குறிப்பிடப்படுகின்ற **ராபின்குட்** என்ற கதாநாயகனுக்கு ஒப்பாகும் வகையில் அவரது குறி தவறுவது கிடையாது. நாடோடி மக்கள் தலைவானான ராபின்குட் தனது வில்லை பிடித்து வைத்து அம்பை இணைத்து குறிவைத்து விட்டால் அந்தக் குறி எந்த நிலையிலும் எப்பொழுதும் தவறுவது இல்லை. ஒரு ஆப்பிள் பழத்தை ஒருவரது தலைக்கு மேல் வைத்து தூரத்தில் நின்று அவர் அம்பை எய்தினால் அந்தப்பழம் மட்டும் அம்பினால் அடித்துச் செல்லப்படும். அதைத் தலையில் வைத்திருந்தவருக்கு எவ்விதப் பாதிப்பும் ஏற்படுத்தியது இல்லை. ஆப்பிள் பழம் அவரது தலையில் இருந்து அடித்துச்செல்லப்பட்டது கூட அவரால் உணர முடிவதில்லை. இதைப் போன்றே தினகர் தமது துப்பாக்கியைத் தூக்கிப்பிடித்து குறிபார்த்து விட்டால், அந்தக் குறியில் குண்டு பாய்ந்து துளைத்துவிடுவது உறுதி. குறிதவறி குண்டு விழுவது என்பது அவரது அனுபவத்தில் ஏற்பட்டதே இல்லை!. இதற்கு ஒரு எடுத்துக்காட்டாக ஒன்றைக் குறிப்படலாம் . மாலை நேரங்களில் சூரியன் மேற்கே மறைந்து மங்கிய ஒளிபடாந்து வரும் வேளையில், வானத்தில் அங்கு மிங்கும் பறக்கும் சிட்டுக்குருவியை விட உருவத்தில் சிறிய தையிலான் என்ற குருவியைக்கூட குறிபார்த்து அவர் வீழ்த்தி விடுவது உண்டு. அவரது இத்தகைய குறி தவறாத திறமை மக்கள் வியந்து பேசும் கதைகளுக்கு காரணமாயிருந்தது.





# கவிதைக் கனவு

இளைஞர் தினகரருக்கு ஏற்ற மங்கை நல்லாள், முதுகுளத்தூர் வட்டம், கருமல் கிராமத்து பெருந்தனக்காரரது பெண் சேதுமுத்து என்பவர் தெரிவு செய்யப்பட்டு தினகரது திருமணம் இராமநாதபுரம் அரண்மனையில் சிறப்பாக நடைபெற்றது.

இராமநாதபுரம் அரண்மனையில் கிழக்கு நுழைவு வாயிலை அடுத்து தெற்கு நோக்கிய "லக்ஷ்மி விலாசம்" அரண்மனையில் புதுமணத்தம்பதிகளது இல்வாழ்க்கை தொடங்கியது. இவர்களது இல்லறம் சிறப்புற நடைபெற தினகரது தாயார் துரைராஜா லக்ஷ்மி நாச்சியார் துணையாக இருந்தார். இராமலிங்க விலாசம் தர்பார் மண்டபம் சேதுபதி மன்னரது இருப்பிடம் ராஜராஜேஸ்வரி அம்மன் ஆலயம் ஆகிய பகுதிகளுக்கு அண்மையில் இந்த மாளிகை அமைந்து இருந்தது.

இந்த மாளிகை வாசம் தினகருக்கு மன அமைதி தருவதாக இல்லை.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் தமையனார் பாஸ்கரசேதுபதி ஒதுக்கீடு செய்த மனையிடத்தில் தமது மாளிகையை அமைத்து அதில் வாழ வேண்டும் என ஆசைப்பட்டார். இந்த மாளிகையை ஒரு புதிய பாணியில் அழகும் கற்பனை நயமும் கலந்த அழகுப் பெட்டகமாக அமைக்க வேண்டும் என இரவு பகலாக அந்த மாளிகை அமைப்பை பற்றியே சிந்தித்து வந்தார். அதுவரை சேதுபதி மன்னர்கள் கையாண்ட கட்டுமான கலை உத்தியில் இருந்து வேறுபட்டதாகவும் இருக்க வேண்டும் எனவும் விரும்பினார். இதற்காக சென்னை சென்று அவரது நண்பர்களையும் கட்டுமானப் பொறியாளர்களையும் சந்தித்து புதிய உத்திகளைப்பெற்று புதிய பாணியில் கட்டுமானம் அமைக்க முயன்றார்.

இந்த மாளிகையின் முகப்பில் இருபுறமும் அமைக்கப்பட்டுள்ள திண்ணைச் சுவர்களில் அஷ்ட லக்ஷிமிகளின் எட்டுவகையான தோற்றம் ஓவியங்களாக தீட்டப்பட்டு இருந்தால் இந்த மாளிகை லக்ஷிமி விலாசம் என பெயர் பெற்றது.

அவர் மாளிகையை அமைக்க அவருக்கு வழங்கப்பட்ட மனை இராமநாதபுரம் கோட்டை வாசலில் இருந்து ஒரு பர்லாங்கிற்கும் சற்று கூடுதலான

தொலைவில், இராமநாதபுரம் கோட்டைக்கும் இராமநாதபுரம் புறக்கோட்டைப்பகுதியான வெளிப்பட்டினத்திற்கும் இடையில் இருந்தது. தெற்கே வெற்றிலைக்கொடிக்கால்கள், சிலவீடுகள், ஒரு பள்ளிவாசல் தவிர, மற்ற மூன்று புறங்களிலும் மனித நடமாட்டம் இல்லாத காட்டுப்பகுதி. அமைதி முழுமையாக ஆட்சி செய்யும் இயற்கையின் எழில் தேங்கிய இடம். சுமார் நூறு ஏக்கர் பரப்பில் கிழக்கே மட்டும் ஒரு சிற்றாறு.

நீண்டு வளர்ந்த காட்டு மரங்கள், பலவிதமான செடி கொடிகளும், வண்ண மலர் முகங்களைக் கொண்டு மென்மையான புன்னகையுடன் அழகிய பறவைகளையும், அணில், முயல், கீரி, நரி, காட்டுப்பூனை, போன்ற சிறிய விலங்குகள் வரவேற்கும் பலவிதச்செடிகள், இன்னும் பன்னீர், மகிழ மரங்களுடன் அருவிகளும் சூழ்ந்து மணமும் பொலிவும் தரும் அழகுடன் விளங்கியது அந்த இடம்.

இந்த அற்புத அழகைச் சிதைத்துவிடாமல் மாளிகை அமைவதற்கு தேர்வு செய்யப்பட்ட தென்மேற்கே உள்ள சில மரங்களும் காட்டுச் செடிகளும் அகற்றப்பட்டு புதிய கட்டுமானப்பணி தொடங்கி நடைபெற்று வருகிறது.இடை இடையே அடிக்கடி தினகர் வந்து திட்டப்படி மாளிகை அமைப்பு நடைபெறுகிறதா என்பதை அக்கறையுடன் மேற்பார்வையிட்டு வந்தார். அவ்வாறு இளம் கற்பனையில் துளிர்த்த அழகு மாளிகை மெதுவாக உருப்பெற்றது. நான்கு மாத கால முடிவில் மாளிகை முழுமை பெற்று எழுந்து நின்றது. கம்பீரம் கலந்த

அழகுத்தோற்றம். ஏதோ ஒரு கற்பனையின் வீச்சு அதில் பிரதிபலித்தது. சதுரத்தைவிட சற்று பெரிய வடிவம் அகலத்தைவிட சற்று கூடுதலான நீளம். கீழ் மேலாகச் செல்லும் கோட்டைப்பாதையை அடுத்து தெற்கு நோக்கிய முகப்பு. அகலமும் உயரமும் மிக்க மூன்று நுழைவாயில்கள். கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலும் ஒன்றாக மூன்று வாசல்கள். இந்த மூன்று வாசல்களையுடைய தெற்குப்பகுதியில் கிழக்கு மேற்கு முனைகளில் அறு சதுர வடிவில் தனி அறைகள். இந்த அறைகளில் இருந்து கிழக்கிலிருந்து மேற்கிலும், மேற்கிலிருந்து கிழக்கிலும் மாளிகையின் ஊடே செல்லத்தக்க வழிகள். இதனைப் போன்று முகப்பு வாசல்களில் இருந்து வடக்கே பின்புறம் செல்ல வழிகள். அதுமட்டுமல்ல மாளிகையின் உட்புறம் காற்று வசதி இருப்பதற்காக ஒரு அறைக்கும் மற்ற அறைக்கும் இடைப்பட்ட சுவர்களில் இலைவடிவ இடைவெளி.

கூடங்களிலும், அறைகளிலும் ஆங்காங்கே தேவ மாடங்கள் போன்ற அமைப்பு. இந்த அழகிய மாடங்களில் குதிரைகள், குதிரைகளுடன் வீரர்களது உருவங்கள், கண்ணைக்கவரும் வண்ணங்களில், தினகரருக்கு குதிரைமீது இருந்த தாளாத அன்பு, காதல், பாசம் பற்று இவைகளின் பிரதிபலிப்பு இந்த குதிரை பொம்மைகள்.

இந்த அமைப்பில் மேல் மாடியொன்றும் அமைக்கத்திட்டமிட்டு இருந்தார். ஆனால் மாடியின் நடுப்பகுதியில் மட்டும் கட்டுமானம் அமைந்த இந்த திட்டம் நிறைவுபெறவில்லை என்பது தெரிகிறது. இன்னும் மாளிகையின் மேல்தளத்தில் உள்ள அமைப்புகள்

இதனை சுட்டிக்காட்டுவனவாக உள்ளன. மேலும் இந்த மாளிகையின் நிலைகள், சாளரங்கள் மாளிகைக்கு உள்ளும் வெளியும் குதிரை லாடத்தை ஒத்த வளைவுகள், பதிமூன்றாம் நூற்றாண்டில் ஸ்பெயின் நாட்டு கார்டோபா சிவிலி ஆகிய நகர மாளிகைகளை அமைக்க ஸ்பெயின் நாட்டு முஸ்லீம் மன்னர்கள் கையான்டவைகளை ஒத்து இருக்கின்றன. மொத்தத்தில் இந்த மாளிகை அமைப்பு கற்பனைகளும் கலைத்திறமையும் மிகுந்த ஒரு இளம் உள்ளத்தில் எழுந்த இனிய கவிதைக் கனவு போன்ற ஒரு முன்மாதிரியான அமைப்பு என்றே கொள்ளுதல் பொருந்தும்.

இந்த மாளிகையின் தோற்றத்திற்கு வலிவும், பொலிவும் ஊட்டும் வகையில் அதன் சுற்றுச்சூழலும் அழகும் இனிமையும் தவழும் வகையில் பல புதிய மணம் வீசும் மலர்களைத்தருகின்ற மரக்கிளைகளையும் செடி கொடிகளையும் சென்னையில் இருந்தும், கோடைக்கானலில் இருந்தும் வரவழைத்து மாளிகையின் கிழக்கு, தெற்குப்பகுதிகளில் நடவு செய்து வளர்க்கப்பட்டன. நாலைந்து ஆண்டுகள் இந்த மாளிகை முற்றுப்பெற்றபொழுது, மாளிகையைச் சுற்றிலும் வண்ண மலர்களைத் தாங்கிய செடிகள், கொடிகள், சரம்சரமாக மஞ்சள் பூக்களைத் தொடுத்து வைத்தாற் போல காட்சியளிக்கும் சரக்கொன்றை மரங்கள், மிகவும் அடர்த்தியான இலைகளுக்கிடையில் கொத்துக் கொத்தாக மணம் வீசும் மகிழம்பூ மலர்கள், உயர்ந்த தேவதாரு மரங்களின் கிளைகளில் ஒட்டி வைத்தது போன்று தொங்கும். நீண்ட காம்புகள் இந்த மலர்களில் இருந்து மிக மென்மையாக வீசும் மணம். இன்னும் எத்தனையோ

மரங்கள், எத்தனையோ வகைகளில், இந்தப் பகுதியில் எங்கும் காணக்கூடிய இனிய இயற்கைச்சூழல் வாய்ந்து அமைதி பொலிவும், இந்த மாளிகையில் தினகரது வாழ்க்கை தொடங்கியது. ஏராளமான நிகழ்வுகள் கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிறந்த பெருமக்கள் இந்த மாளிகைக்கு வருகை தந்தனர். தினகருடன் அளவளாவினர். மனிதநேயமும் சமரச மனப்பான்மையும் கொண்ட கல்விக் களஞ்சியமான தினகரைச் சந்தித்துப்பேசி இலக்கிய தர்க்கங்களில் ஈடுபட்டனர். அரண்மனை மரியாதைகளுடன் திரும்பிச் சென்றனர். அவைகளை துலக்கமாகத் தெரிவிக்கக்கூடிய சான்றுகள் மறைந்து விட்டன. அவைகளுக்கான மௌன சாட்சியாக இந்த ஒரு நூற்றாண்டுகாலமாக இந்த மாளிகை இருந்து வருகிறது.

இராமநாதபுரம் நகர வரலாற்றுச் சுவடிகளில் மிகவும் சிறப்பான ஏடாக இன்னும் கவிதைக் கனவு போல.





# கவிதைக்குப் பாராட்டு

**1926**-ம் ஆண்டு ஜூலை மாதம் கோடைக்காலம் கருக் கொண்டு இருந்தது.

இராமநாதபுரம் அரண்மனையில் விறுவிறுப்பும் அலங்கார வேலைகளும் தொடர்ந்து நடந்து வந்தன. அரண்மனைச் சேவகர்கள், சோப்தார், தலாயத், ரிஜிஸ்தார் என்ற பலவகைப்பட்ட பணியாளர்களுக்கும் அழகிய வண்ணங்களில் சீருடை தயாரிக்கப்பட்டுதயாரிக்கப்பட்டு வந்தன. சுவர்களில் அழகிய வண்ணங்கள் பூசப்பட்டன. அரண்மனை முகப்பிலும், ராஜ வீதியிலும் உள்ள தேவையில்லாத மரங்களும், கிளைகளும் வெட்டப்பட்டு அகற்றப்பட்டன. இராமநாதபுரம் ரயில் நிலையத்திலிருந்து அரண்மனை வாசல் வரையிலான வீதியில் சரளைக் கற்களும், மணலும் பரப்பப்பட்டு செம்மை செய்யப்பட்டு வந்தன.

இந்த பணிகளை குதிரையில் வந்த திவான் தினகர் பார்வையிட்டு ஒப்புதல் அளித்தார். இதனைப்போன்றே, இராமநாதபுரம் துணைக் கலெக்டர் அலுவலகத்திற்கு அண்மையில் உள்ள லேத்தம்ஸ் மாளிகையும் செப்பனிட்டு அலங்காரம் செய்யப்பட்டன. மாளிகையைச் சுற்றி உள்ள பரந்த வெயிலில் புதுவிதமான பூச்செடிச் சட்டிகளுடன் காணப்பட்டன.

இவ்வளவு ஏற்பாடும் எதற்காக ?

அப்பொழுது சென்னை மாநில கவர்னராக இருந்த கோஷன் துரை இராமேஸ்வரம் செல்லும் வழியில் இராமநாதபுரம் **முத்துராமலிங்க சேதுபதி**யின் வேண்டுகோளுக்கு இணங்க இராமநாதபுரம் நகருக்கு கவர்னர் வருவதையொட்டி இவ்வளவு ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வந்தன.

பைந்தமிழ்க்காவலர் பாஸ்கர சேதுபதியின் மைந்தர் தான் ராஜேஸ்வர முத்துராமலிங்க சேதுபதி. தமிழில் ஆழ்ந்த புலமையும் ஈடாக ஆங்கில மொழியில் எழுதவும் பேசவும் சிறப்பான தகுதி பெற்று இருந்தார். கி.பி. 1913 முதல் மதுரையில் உள்ள தமிழ்ச் சங்கத்தின் தலைவராகவும் இராமநாதபுரம் டிஸ்டிரிக்ட் போர்டு தலைவராகவும் பணியாற்றி வந்தார். அந்தக்காலத்தில் ஆந்திரம், கன்னடம், கேரளம் உள்ளிட்ட சென்னை மாநில கவுன்சிலில் ஜமீன்தார்களுக்கான பிரதிநிதியாகவும் அங்கம் வகித்து வந்தார்.

இவரது அறிவார்ந்த பணிகளையும் ஆற்றல் மிக்க செயல்பாடுகளையும் அறிந்து இருந்த கவர்னர் சேதுபதி மன்னரது விருப்பத்தை ஏற்று 23-7-1926 ஆண்டு தமது மனைவியுடன் இராமநாதபுரம் வருகை தந்தார். அன்று முற்பகலில், சிறப்பு ரயில் மூலம் இராமநாதபுரம் ரயில் நிலையம் வந்து சேர்ந்த கவர்னர் தம்பதிகளை, சேதுபதி மன்னரும், திவான் தினகரும் சிவப்பு கம்பள வரவேற்பும் அளித்து வரவேற்றனர். ஊர்வலமாக இராமநாதபுரம் அரண்மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு இராமலிங்க விலாசம் அரண்மனையில் மன்னரது உறவினர்களும் நண்பர்களும் குழுமி இருந்த சிறப்புப் பேரவையில் கவர்னருக்கு வரவேற்புக் கூறி அன்பளிப்புப் பொருள்களை வழங்கினார்.

அடுத்து, மன்னரது சிறிய தந்தையும், இராமநாதபுரம் சமஸ்தான திவானாக இருந்த தினகர் சேதுபதி, கவர்னருக்கு சிவப்பு அட்டைக்குள் அமைந்த ஆங்கில நூல் ஒன்றை கவர்னருக்கு தமது சொந்த அன்பளிப்பாக வழங்கினார். நல்ல வளவளப்பான ஆர்ட் காகிதத்தில் அச்சிடப்பட்ட அந்த நூலைப் பெற்றுக்கொண்ட கவர்னர் திவான் தினகர சேதுபதிக்கு நன்றி தெரிவித்துவிட்டு அந்த நூலின் சில பக்கங்களைப் புரட்டிப்பார்த்ததும் மிகவும் வியப்படைந்தார். தமிழகத்தின் மிகவும் பிற்பட்ட பகுதியான மறவர் சீமை என்று வழங்கப்பெறும் இராமநாதபுரம் ஜில்லாவில் இப்படியொரு ஆங்கிலக் கவிஞரா? இங்கிலாந்து நாட்டு ஷெல்லி, கீட்ஸ், வில்லியம் கூப்பர், வர்ட்ஸ்வொர்த் கவிஞர்கள் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டிய புலமை

என்ன அற்புதமான வரிகள்! பெரும்புலவர்களான ஷேக்ஸ்பியர், மில்டன் ஆகியோரது அரிய சிந்தனைகளின் மறு உருவாகவல்லவா அவை அமைந்து இருக்கின்றன.

கவர்னர் அடைந்த மட்டற்ற மகிழ்ச்சி அவரது வார்த்தைகளாக வெளிப்பட்டன.

கவர்னரது அரண்மனை வரவேற்பில் கலந்து கொள்ள அங்கு குடியிருந்த மக்களும் மன்னர் முத்துராமலிங்க சேதுபதியும், மகிழ்ச்சியினால் கைதட்டி ஆரவாரம் செய்தனர். இந்த உலகின் ஐந்துபெரும் நிலக் கூறுகளில் ஒன்று ஆப்பிரிக்க கண்டம். வடக்கே மத்திய தரைக்கடலும், மேற்கே பசிபிக் பெருங்கடலும், தெற்கிலும், கிழக்கிலும் இந்தியப் பெருங்கடலும் சூழ்ந்த மிகப்பெரிய தீப கற்பம். வடக்கே பெரும் பகுதி பாலை நிலமாக அமைந்து காணப்படுவது மத்திய தென்பகுதியில் நீக்ரோ இனத்தவரான பலபிரிவு மக்கள் நிறைந்து வாழும் நாட்டில் இயற்கை வளங்களைக் கொள்ளை கொண்டு செல்வதற்காக முதலில் போர்த்துகீசியர்களும் பின்னர் டச்சு பிரஞ்சு நாட்டவரும் இங்கே புகுந்து இந்த நாட்டில் பலபகுதிகளை தத்தமது நாட்டின் உடமைகளாக குடியேற்றப்பகுதிகளாக மாற்றினர். இந்த பரங்கிகளைத் தொடர்ந்து, பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் கி.பி. 1806 -ல் கேப் பகுதியில் நுழைந்து இந்த நாட்டின் தென்கிழக்குப் பகுதியை ஆங்கிலேயர் வன்முறையில் மாற்றினர். இந்தப் பகுதியை ஒட்டிய ஜுலு, போயர் இனமக்கள் வாழும் பகுதிகளை கி.பி. 1816-ல் டச்சுக்காரர்களிடமிருந்து அறுபது லட்சம் பவுன்

ஸ்டர்லிங் தொகைக்கு கிரையம் பெற்றனர். ஆங்கிலக்கல்வி, நாகரிகம், பண்பாடு, ஆங்கிலமொழி, நிர்வாகம் ஆங்கிலச் சட்டதிட்டங்களைப் புகுத்தினர். இந்தப்பகுதிதான் இன்று தென் ஆப்பிரிக்க குடியரசு என்ற பெயருடன் செயல்பட்டு வருகிறது.

ஆனால் கி.பி. 19 ஆம் நூற்றாண்டு பகுதியில் ஆட்சியாளராக விளங்கிய ஆங்கிலேயர்களை எதிர்த்து போயர் எனப்படும் தென்னாப்பிரிக்க இனத்தவர் கலகக்கொடி உயர்த்தினர். பல இடங்களில் பல மாதங்கள் போர். அப்பொழுது தென்னாப்பிரிக்காவில் வழக்குரைஞராகப் பணியாற்றிய காந்தியடிகள் இந்த போரினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு மருத்துவ உதவி அளிக்கும் தொண்டர்படையில் பணியாற்றினார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இந்த ஆங்கில போயர் போரில், போர்ப்பயிற்சியும் ஆயுத வசதியும் இல்லாத அந்நிய எதிர்ப்பு உத்வேகத்தில் போராடிய போயர் மக்கள் தோல்வி அடைந்தனர்.

இந்தப் போரில் ஆங்கில வீரர்கள் காட்டிய தீரத்தையும் தங்களது நாட்டு நலனுக்காக போராடி தியாகிகளான வீரர்களது தியாகமும் தினகர சேதுபதியின் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. இந்த நிகழ்ச்சிகளை ஆங்கிலக் கவிதையில் வடித்த தினகரர், இந்தச்சிறு கவிதை நூலாக்கி அச்சிட்டு, இராமநாதபுரம் வந்த கவர்னர் கோஷன் பிரபுவுக்கு அன்பளிப்பாக வழங்கினார். ஒரு பொருத்தமான நினைவுப் பரிசாக இருந்தது. ஆங்கில அரசாங்கத்தின் உயர்பதவியான மாநில

கவர்னருக்கு இதைவிடச் சிறந்த அன்பளிப்பை வேறு யாரும் வழங்க முடியாது. கவர்னரது பாராட்டையும், புகழ்ச்சியையும் பெற்ற தமது சிறிய தந்தையாருக்கு, இராமநாதபுரம் சேதுபதி மன்னரும் தமது மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டார். மிகுந்த மன நிறைவுடன் கவர்னர் சேதுபதி மன்னரது வரவேற்பை பெற்றுக் கொண்ட கவர்னர், அடுத்து லேத்தம்ஸ் பங்களாவில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மதிய விருந்தில் கலந்து கொள்ள புறப்பட்டார்.

இராமநாதபுரம் நகர் மக்கள், கவர்னருக்கு தினகர் வழங்கிய அன்பளிப்பு நூல் பற்றியும், கவர்னர் தினகரைப் பாராட்டியது பற்றியும் அன்று முழுவதும் வெகுவாகப் பேசிக்கொண்டே இருந்தனர். பொதுவாக, நம்மில் ஒருவரை நாம் புகழ்வது என்பது அரிய செயல். அதிலும் வேற்றுநாட்டவரும், மிக உயர்ந்த பதவியில் இருக்கும் ஒருவர் நம்மவர் ஒருவரைப் புகழ்ந்தால் அது மக்கள் பெருமையுடன் பேசி மகிழும் பேச்சாக அமைவது இயல்புதான்.





# தொடரும் இலக்கியப்பணி

தமது கன்னி முயற்சியாக தினகர் இயற்றிய ஆங்கிலக் கவிதை நூல் இராமநாதபுரம் வருகை தந்த சென்னை கவர்னரது பாராட்டைப் பெற்றது தினகருக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தது. மேலும், ஆங்கில நூல்களை இயற்றுவதற்கு ஊக்குவிப்பாகவும் அமைந்தது. அவரது உள்ளத்தில் உறைந்து போயிருந்த ஆங்கில மொழிப்புலமையை எழுத்தில் வடிக்கத் தொடங்கினார். இதற்காக, அவர் எடுத்துக் கொண்டது வால்மிகியின் வடமொழி இலக்கியமான இராமாயணம். சென்னை பட்டண வாழ்க்கையில் அவருக்கு சமஸ்கிருத மொழிப் பண்டிதர்கள் எடுத்துக்காட்டிய இலக்கிய நயங்களையும், அதன் பின்னர் இராமநாதபுரத்தில் வடமொழி இலக்கியங்களில் அவர்

படித்துணர்ந்த செய்திகளையும் தொகுத்து ஒரு சிறு நூலாக வெளியிட்டார். இதன் தலைப்பு "**THE HIDDEN TRUTH OF VALMIKI**" என்பது.

இந்த நல்ல இலக்கிய முன் முயற்சியைத் தொடர்ந்து அவர் எழுதியது "**THE DIVINE TRAGEDY**" தெய்வீக அவலம் பற்றியது. விதி என்றும் ஊழ் என்றும் மக்களது சோர்வடைந்த மனத்திற்கு ஆறுதலும் தேறுதலும் கொள்ளும் மனப் பக்குவத்தை வலிந்துரைக்கும வகையில் அமைந்தது இந்நூல். இடையில் தினகரரது கண் பார்வை பறிக்கப்பட்ட நிலையில் இவரது இந்த முயற்சி சில காலம் தடைபட்டது. இந்த தாங்க முடியாத பேரிழப்பைத் தாங்கியவாறு அல்லும் பகலும் அமைதியற்ற மனநிலையில் அவரது மனம் எழுத்தில் இணைய மறுத்தது. தாமே எழுதுவதும் இயலாத காரியம். இவ்விதம் உறுதியற்ற நிலையில் எழுத்துப் பணியில் ஈடுபடத் தயங்கிய அவரது உள்ளம் ஒரு திடமான முடிவைக் கண்டது. தாமே எழுத இயலாதது தான்!. ஆதலால் இன்னொருவரது உதவிகொண்டு தமது எண்ணங்களை எழுத்தாக மாற்றுவது என்பது அந்த முடிவு. யாரை இதற்கு பயன்படுத்துவது ? அதற்கு தகுதியான ஒருவரையும் அவரே தேர்வு செய்தார். அவரது மாளிகையில் அவரது உதவியாளராகவும் பன்னிரண்டு ஆண்டுகளாகப் பணியாற்றிவரும் குஞ்சர நாச்சியார்தான் அந்த எழுத்துப் பணிக்கு ஏற்றவர். அவரது உறவினர் ஆங்கிலத்தைப் படிக்கவும் எழுதவும் கற்று இருந்தவர்.

தினகர் எழுத வேண்டும் என்ற எண்ணும் பொழுது

பேனாவும் நோட்டு புத்தகமுமாக அவர் வந்து நிற்பார். தினகர் சொல்வதை மிகவும் அக்கறையுடன் எழுதி இறுதியாகப் படித்துக்காண்பித்து அவரது ஒப்புதல் பெறுவார். சரி இப்பொழுது எதைப் பற்றிய நூல் எழுதுவது ? விரைவிலேயே ஒரு முடிவிற்கு வந்தார்.

சேதுபதிகள் இராமேஸ்வரம் இராமநாத சுவாமியை ஏற்றிப் போற்றும் இயல்பினர். வாழையடி வாழையாக வந்த சிவ நெறிச் செல்வர்கள். ஆனால், இவரது தந்தையார் துரைராஜா முத்து ராமலிங்க சேதுபதி மட்டும் இவர்களது முந்தையோர்களுக்கு விலக்காக மிகச் சிறந்த முருக பக்தராக விளங்கினார். " முருகனைத் தவிர வேறு ஒரு பேயை விளம்புதிரேல் " .. .. . என வெறிபிடித்தவர் போல பாடியிருப்பவர். அவர் பாடிய பாட்டு சிற்றிலக்கியங்களில் இரண்டு குமரக்கடவுள் பற்றியது .

இவ்விதம் சிறந்த முருக பக்தரான தந்தையாரைப் பின் பற்றி முருகக் கடவுள் பற்றிய ஆய்வில் தோய்ந்தார் . முருகனைப் பற்றி தமிழ் இலக்கியங்களை ஏற்கனவே நன்றாக படித்து இருந்தார். குறிப்பாக அருணகிரிநாதர் இசையொடு அமைந்து இனிமையைப்பயக்கும் திருப்புகழ் பாடல்களுக்கு இணையான தமிழ்ப்பாடல்கள் இல்லைதான். ஆதனால் இவர் தமது கடவுள் சிந்தனைகளை தாம் கற்ற சமஸ்கிருத நூல்கள், திருக்குறள், தேவாரம், திருப்புகழ், சோதிட சாஸ்திரம் போன்ற அரிய நூல்களின் ஆதாரங்களைக் கொண்டு எழுதினார் . இந்த சிந்தனைக் களஞ்சியம் ஆங்கிலம், தமிழ், ஆகிய இரு மொழிகளில் வரையப்பட்டன. தமிழில் "இந்து மத சூட்சமம் " என்ற தலைப்பில் இந்த நூலின் முதல் பகுதி

இவர் மரணமடைவதற்கு சரியாக நான்கு மாதங்களுக்கு முன்னர் அச்சிட்டு கி.பி.1942ல் வெளி வந்தது. அடுத்த பகுதிகள் அச்சில் வந்தனவா என்பதை அறிய முடியவில்லை.

இதனைப் போன்றே இவரது முருகக் கடவுள் பற்றிய ஆங்கில வெளியீடும் அச்சில் வந்த விவரம் தெரியவில்லை. இந்த தொகுப்பிற்கு **"THE PRABANDAM OF LORD MURUGA"** எனப் பெயரிட்டு இருந்தார். இந்த நூலைத் தினகர் சொல்லச் சொல்ல தான் அதனை முழுமையாக எழுதிமுடித்ததாக இன்றும் உயிரோடு இருக்கும் மூதாட்டி குஞ்சரம் நாச்சியார் அவர்கள் தெரிவிக்கிறார்கள். தினகரது இலக்கிய அனுபவம், அவர் கற்றறிந்த நூல்களில் நுண்மான் நுழை புலமாகவும் தமிழகத்தில் சங்க காலத்தொட்டு தொடர்ந்து வரும் குமரக் கடவுளது வழிபாடு பற்றிய ஆய்வாகவும் அமைந்த இந்த நூல் நமக்குக் கிடைக்காமல் போனது இலக்கிய உலகிற்கு மிகப்பெரிய இழப்பாகக் கருத வேண்டியுள்ளது.

தினகர் இறக்கும் தருவாயில் அவரது தமையனாரது வழித்தோன்றல்களுக்கும் இடையே நல்ல உறவுகள் நீடிக்கவில்லை. கருத்து வேறுபாடுகள் தொடந்து வந்தன. இதன் பிரதிபலிப்பாக கி.பி.1893ல் மன்னர் பாஸ்கரர் தமது தம்பி தினகரது ஆயுட்காலம் முழுவதும் மாத நிவேதனமாக ஒவ்வொரு மாதமும் வழங்க வேண்டிய தொகையை இராமநாதபுரம் சமஸ்தான நிர்வாகிகள் கி.பி.1933 முதல் நிறுத்தி விட்டனர்.

தினகர் கண்ணொளி இழந்து அவதிப்பட்ட நிலையில் இராமநாதபுரம் சமஸ்தான நிர்வாகிகளது

மனிதாபிமானமற்ற இச்செயல் தினகரை மிகவும் வருத்தியது. தினகரும் தமது நியாயப்படி கிடைக்க வேண்டிய தொகை பற்றி சென்னை துரைத்தளத்தாருக்கு முறையீடு செய்தார். ஆறு ஆண்டுகள் கழித்து அவருக்குச் சாதககமான தீர்ப்பினைப் பெற்றார். இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு வேறு வழியில்லாமல், ஆறு வருடத்திற்குரிய தொகையையும் முழுமையாகக் கொடுக்க வேண்டிய நிர்பந்தம். இதனால் இராமநாதபுரம் அரண்மனைக்கும் அவருக்கும் இடையில் இதனால் நிலவிய நல்ல உறவுகள் தடைபட்டன.

இத்தகைய இறுக்கமான சூழ்நிலையில் தினகர் காலமானபொழுது அவரது ஒரே வாரிசான செல்வி வசந்தவேணி பதினெட்டு வயதுள்ள இளம் பெண்ணாக இருந்தார். இராமமந்திரம் மாளிகைக்கு எவ்விதச் சம்பந்தமில்லாதவர்கள், இரத்த பந்த மற்றவர்கள் அடாவடியான முறையில் தினகரது சொத்துகளைக், அரிய பொருள்கள், அணிமணிகள், நூல்கள், தளவாடங்கள் ஆகியவற்றைக் கொள்ளை கொண்டு சென்றனர் .

இந்தப் பகல் கொள்ளையைத் தடுக்க தினகரரது உறவினர்கள் யாரும் முன்வரவில்லை. அதன் முடிவு அவரது ஆய்வுக் களஞ்சியமான நூல்களும், நூல்களின் கைப் பிரதிகளும் மறைந்து விட்டன. அவைகள் மறைந்துள்ள இடமும் இன்னும் புலப்படவில்லை . காலம் கனிந்து கருணை செய்தால் இந்த நூல்கள் வெளிவந்து இலக்கிய உலகிற்கு வலுவூட்டும் என்பதில் ஐயமில்லை அது வரை காத்து இருக்க வேண்டிய தான் ! வேறு வழியில்லை !.





# முன்னோடி முயற்சிகள்

பத்தொன்பதாவது நூற்றாண்டு பிறந்ததும் இங்கிலாந்து நாட்டில் இருந்த சாமான்கள் கப்பல் கப்பலாக வந்து இறங்கின. குண்டூசி முதல் ரயில் இன்ஜின் வரையான அனைத்து சாமான்களும் நமது நாட்டு கடை வீதிகளையும் சந்தைகளையும் நிறைத்தன. இந்திய மக்களது பணம் கோடிக்கணக்கில் இங்கிலாந்து நாட்டுச் செலவாணிக்கு உதவியது. இந்த நாட்டில்,. நூற்றாண்டு நூற்றாண்டாக தலைமுறை தலைமுறையாக வளர்ந்து வந்த கைத்தொழில்கள், உற்பத்தி முறைகளைப் பரங்கிகள் அழித்து விட்டதால் இந்த நாட்டின் மூலப்பொருட்களைக் கொண்டு இங்கு எந்தத் தொழிலும் நடைபெறவில்லை.

மாறாக, இந்த நாட்டின் விளைபொருளான பஞ்சு,

இங்கிலாந்து நாட்டு கிளாக்ஸோ யார்க்ஸயர் ஆலைகளில் அன்னத்தின் தூவியை விட மிக மெல்லிய துணியாகத் தாயரிக்கப்பட்டு இங்கு கொண்டு வரப்பெற்று மக்களிடம் விற்கப்பட்டன, இங்கு கிடைக்கும் இரும்புத் தாதுக்கள் கப்பலேறி இங்கிலாந்து நாட்டு ஷெப்பீல்டு பர்மிங்உறாம் நகரத் தொழிற்சாலையில் வார்க்கப்பட்ட இரும்புச் சாமான்களாக இங்கு கொண்டு வரப்பட்டன. இன்னும் கண்டங்கத்திரி செடியும், ஆடாதொடைப் பூக்களும் வெடிங்க்டன் மருத்துவக் கூடத்தில் மாற்றப் பெற்று அலோபதி மருந்தகளாக இங்கு விற்கப்பட்டன.

மலிவாகவும் எளிதாகவும் கிடைத்த இந்தப்பொருட்களை மக்கள் பயன்படுத்தி வந்ததில் வியப்பு இல்லை. இந்தப் பொருட்களைக் கொண்டு இந்த நாட்டில் ஆலைகளும் தொழிற்சாலைகளும் அமைத்து குடிசைப் பொருட்களைை இங்கு உற்பத்தி செய்தால் என்ன ? பொருட்களின் விலையில் இன்னும் குறைவு இருக்கும் அல்லவா ? ஆம் அப்படியானால் இங்கிலாந்து நாட்டு தொழிலாளிக்கு மாதம் முழுவதும் வேலையும் கூலியும் கிடைக்காதே ! ஆங்கிலேயர்களால் ஆளப்படும் இந்த அடிமை நாட்டு மக்கள் வேலையில்லாமல் பட்டினிகிடந்து சாவதைப் பற்றி ஆங்கிலேயருக்கு கவலையில்லை. பொருள் வசதி படைத்த பிரமுகர்களும் இதைப் பற்றி சிந்திக்கவில்லை அவர்களுக்கு அப்பொழுது உரிய விழிப்புணர்வும் இல்லை.

இத்தகைய சூழ்நிலையில் இராமநாதபுரம் சேதுபதி மன்னர் குடும்பத்தினர் சில திட்டங்களை முன்னோடியாக நடை முறைப்படுத்த முயன்றனர். மன்னர் பாஸ்கர

சேதுபதியின் உடன் பிறவாத தமையனாரான **வள்ளல் பாண்டித்துரைத்தேவர்** அவர்களும் தூத்துக்குடி சேதபக்தரான **வ.உ.சிதம்பரம் பிள்ளை** அவர்களும் இணைந்து கி.பி.1906ல் **சுதேசி ஸ்டீம் நாவிகேஷன்** என்ற கப்பல் நிறுவனத்தைத் தொடங்கினார். தூத்துக்குடி துறைமுகத்திற்கும்,இலங்கை,கொழும்பு துறைமுகத்திற்கும் இடையில் பயணிகள், சாமான்கள் போக்குவரத்திற்காக இந்த நிறுவனத்தின் பங்குகளை சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய்களுக்கு வள்ளல் பாண்டித்துரைத் தேவர் வாங்கியதுடன் அந்த நிறுவனத்தின் தலைவராகவும் பணியாற்றினார்

பாஸ்கர சேதுபதி மன்னரின் புதல்வரான ரா்ஜேஸ்வர முத்துராமலிங்க சேதுபதி அவர்கள் கி.பி.1918ல் மதுரைக்கு கொடைக்கானலுக்கும் இடையில் மோட்டார் வாகனம் முலம் பயணிகளையும் , தபால்களையும் அனுப்பி வைக்கும் திட்டம் ஒன்றை நடைமுறைப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டார் .

இவர்களைப் போல , நமது தினகர் அவர்களும் ஒரு புதிய வணிக முயற்சியை மேற்கொண்டார். இராமநாதபுரம் சமஸ்தானத்தின் கிழக்குப்பகுதி என்பது யாவரும் அறிந்தஒன்று. இந்த சமயத்தில் மக்களில் பெரும்பாயோர் விவசாயத்திற்கு அடுத்தப்படியாக கடல் தொழிலை நம்பி வாழ்பவர்கள். இந்த மக்களின் மிகப் பெரும்பான்மையோர் மீனை உணவாகக் கொள்பவர்கள் இவர்களுக்கு நாள்தோறும் கடலில் பிடிக்கப்படும் மீன்கள் சில மணி நேரங்களில் கெட்டுப் போய்விடும், ருசியும் மாறிவிடும். இந்தக் குறைப்பாடுகளைத் தவிர்க்க,

குளிர்பதனத்திற்கு உதவும் ஐஸ்(பனிக்கட்டிகளைத்) தயாரித்தால் என்ன என்ற சிந்தனை தினகருக்கு ஏற்பட்டது .

சில மாதங்களில் இங்கிலாந்து நாட்டில் இருந்து இந்த தொழிற்சாலை அமைப்பதற்கான இயந்திரங்கள் இராமமந்திரம் அரண்மனைக்கு வந்து சேர்ந்தன. இன்றைக்கு எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் இராமநாதபுரத்தில் பனிக் கட்டிகளும் தயாரிக்கப்பட்டன. ஆனால் மீன் வணிகத்தின் ஈடுபட்டு வந்தவர்களிடம். பொதுமக்களிடமிருந்தும் பனிக்கட்டிகளைப் போதுமான அளவில் கொள்முதல் செய்து பயன்படுத்தும் மனப்பான்மை ஏற்படவில்லை. இராமமந்திரம் அரண்மனையின் முந்தைய நுழைவாயிலை ஒட்டி அமைக்கப்பட்ட சிறிய இந்த தொழிற்சாலையும் அதனை ஒட்டிய மனையையும் கத்தோலிக்க திருச்சபையினரின் தொடக்கப் பள்ளி ஒன்று தொடங்குவதற்காக மன்னர் பின்னர் அன்பளிப்பாக வழங்கினார். இப்பொழுது இந்தப் பள்ளி மாணவர்கள் பயிலும் ஆர்.சி. தினகர் நடுநிலைப்பள்ளியாக இயங்கி வருகிறது என்பதும் ஆயிரத்திற்கும் கூடுதலான மாணவர்கள் இந்தப் பள்ளியில் பயின்று வருகின்றார்கள் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மக்களிடையே தொழில் வாணிபம் பற்றிய விழிப்புணர்வு வளராத நிலையில் தினகர் இந்த திட்டத்தைத் தொடங்கி வைத்த முன்னோடி மனிதராக விளங்குகிறார் என்பது தான் அவரது இந்த முயற்சி நமக்கு நினைவுறுத்துகிறது. இன்னும் இதே இராமநாதபுரம் மாவட்ட கிழக்கு கடற்கரையில் தொண்டி,

மண்டபம், பாம்பன், இராமேஸ்வரம், ஆகிய ஊர்களிலும், இராமநாதபுரத்திலும் பல பனிக்கட்டிகள் தயாரித்து வரும் தொழிற்சாலைகள் இயங்கி வருவதுடன் மண்டபம் நகரில் மட்டும் பத்துக்கும் மிகுதியுள்ள தொழில் நிலையங்களில் இரால் மீன்கள் சுத்தம் செய்யப்பட்டு பனிக்கட்டியில் அடைத்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வரும் தொழில் மும்முரமாக நடந்து வருகின்றன. பலகோடி ரூபாய் அன்னிய நாணயச் செலாவணி அரசுக்கு கிடைக்கிறது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மேலும் இன்னொரு முயற்சியிலும் தினகரர் ஈடுபட்டார். சொந்த நலனுக்கு அல்லாமல் பொது நோக்குடன் இராமநாதபுரம் நகரை அழகுபடுத்த வேண்டும் என்ற இலக்கினைக் கொண்டது இந்தத்திட்டம். இராமநாதபுரம் கோட்டைப்பகுதியில் பாழடைந்து போய்க்கிடந்த அகழிப்பகுதியை மூடிக் குடியிருப்புப் பகுதியாக மாற்றுவது. மக்களுக்குப் பயன்படும் இந்த திட்டத்தினால் ஊரில் பொதுவான தோற்றம், அழகும், பொலிவும், மிக்கதாக விளங்க ஏதுவாக இருக்கும் அல்லவா? நகரில் விரிவாக்கம் திட்டமிட்ட வகையில் ஏற்படும் என்பதும் அவரது முடிவு.

முந்தைய காலங்களில் இராமநாதபுரம் என்று குறிப்பிட்டால் அது இராமநாதபுரம் கோட்டையின் உட்பகுதியான சேதுபதி மன்னரது அரண்மனை, அரண்மனையில் பணியாற்றும் அலுவலர்கள், மற்றும் காதண்டராமசாமி, சொக்கநாதசுவாமி ஆலயங்களைச் சேர்ந்த குருக்கம், திருப்பணியாற்றும் இருப்பிடங்களைக்

கொண்ட குடியிருப்பு பகுதியை மட்டும் குறிப்பாக இருந்நது. அதாவது இன்றைய கடை வீதியில் உள்ள கோட்டைவாசல் பிள்ளையார்கோவிலில் இருந்து மேற்கே நொச்சிவயல் ஊரணி வரையான பகுதி இராமநாதபுரம் கோட்டைப்பகுதியாகும். இந்த கோட்டையை ரகுநாத கிழவன் சேதுபதி வலிமைமிக்க கற்கோட்டையாக கி.பி.1680-85ல் அமைத்தார். அடுத்த கி.பி.1702ல் மதுரை ராணி மங்கம்மாளது படைகளில் முற்றுகையின் பொழுதும் கி.பி.1772ல் ஆற்காட்டு நவாப்பின் படைகளும் முற்றுகையின் பொழுதும் கிழக்கிந்திய படைகளும் இணைந்து நடத்திய முன்று நாள் போரிலும் இந்தக் கோட்டை மிகவும் சேதமுற்றது. இந்நிலையில் கி.பி.1799-1801ல் இராமநாதபுரம் சீமையிலும் சிவகங்கைச் சீமையிலும் ஆங்கில அரசாங்கத்திற்கு எதிராக எழுந்த மக்கள் கிளர்ச்சிகளை அடக்கி ஒடுக்குவதில் ஆங்கிலேயர் மிகவும் சிரமப்பட்ட காரணத்தினால், மீண்டும் அத்தகைய கலகநிலை ஏற்படுவதைத் காரணத்தினால், மீண்டும் அத்தகைய கலகநிலை ஏற்படுவதை தவிர்ப்பதற்காக தமிழ் நாட்டில் உள்ள கோட்டைகளையும் அரண்மனை அழித்துவிடும்படி கி.பி.1803, 1804ல் சென்னை கவர்னர் ஆணை பிறப்பித்தார். இதனால் இராமநாதபுரம் கோட்டை மதிலும்அலங்கங்களும் இடித்து அழிக்கப்பட்டன. இராமநாதபுரம் கோட்டையின் வடக்கு. கிழக்கு பகுதிகளில் இந்த அழிபாடுகளும் அகழிப் பகுதிகளும் கோரத் தோற்றத்துடன் விளங்கின.

இந்தப்பகுதிகளைத்தான் மக்கள் தினகர் குடியிருப்பு பகுதியாக மாற்றத்திட்டமிட்டனர். இந்தத்திட்டம் முழுமையான வெற்றி பெற்றது. மக்கள் ஒரு சிறிய

தொகையை இராமநாதபுரம் சமஸ்தான பொக்கிசத்தில் செலுத்திவிட்டு வீடுகள் கட்டிக்கொள்வதற்கு மனை ஒதுக்கீடு ஆணையை இராமநாதபுரம் சமஸ்தான திவான் தினகரிடமிருந்து பெற்று இந்த மனைகளில் வீடுகளை அமைத்தனர் . இதனால் இராமநாதபுரம் கோட்டைப்பகுதி, நீலகண்டி அக்ரஹாரம், யானைக்கல் வடக்குத் தெரு, அலங்கச்சேரி தெரு, மாரியம்மன் கோவில் தெரு, கோழிக்கிடங்குத் தெரு, வண்டிக்காரத் தெரு, சிகில் ராஜவீதி, சாலைத் தெரு, காதர் பள்ளிவாசல் தெரு என்ற புதிய குடியிருப்புகள் பகுதிகளுடன் இராமநாதபுரம் நகரம் விரிவடைந்தது.

பலநூற்றாண்டுகளாக ,சேதுபதி மன்னரது பணியில் இருந்த கொல்லர், தச்சர், தட்டர், தையல்காரர், கட்டிகர்ரர், குயவர், கட்டுமானத் தொழிலாளர்கள், அரிப்புக்காரர், சாயக்காரர், என்ற பணியாளர்கள் இராமநாதபுரம் கோட்டைக்கு வெளியே கிழக்கில் ஒருகல் தொலைவில் தனிக்குடியிருப்பாக அமைத்து வாழ்ந்து வந்தனர். அந்தப்பகுதி வெளிப்பட்டணம் என்று வழங்கப் பட்டது. திவான்தினகரது திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டதால், இராமநாதபுரம்கோட்டைப்பகுதியும் வெளிப்பட்டணமும் இணைத்த பெருநகரமாக மாற்றம் பெறுவதற்கு வழி ஏற்பட்டது.

இந்த திட்டத்தை நடைமுறைப் படுத்தப்பட்டதினால் தினகர் ஒரு சிறந்த நிர்வாகி என்பது மட்டுமல்லாமல், ஒரு நல்ல முன்னோடி மனிதர் என்பதையும் வரலாறு உறுதிப்படுத்துகிறது.





# மகப்பேறு தந்த மகிழ்ச்சி

தினகரரது இல்லறம் தொடர்ந்தது. அவரது இல்லத்தரசி சேதுமுத்து நாச்சியாரும் குறைகள் எதுவும் இன்றி தினகருடன் இணைந்து வாழ்ந்து வந்தார். இருவரும் வாழ்க்கையின் இடைப்பகுதியை அடைந்து விட்டனர். ஆனால் . . .? இருவருக்கும் குழந்தைப் பேறு கிட்டவில்லை. இறைவனது நியதி அவ்வளவுதான் என்ற எண்ணம் இருவருக்கும் வலுத்து வந்தது. நாச்சியார் ஓரளவு தேறுதல் பெற்றுவிட்டார். ஆனால் தினகரது உள்ளத்தில் ஒரு தவிப்பு .

அமைதியும் அழகும் நிறைந்த இராமமந்திரம் மாளிகையில் குழலும் யாழும் கூட்டாத இனிய மழலை ஒலி மட்டும் கேட்கவில்லையே ? என்ன செய்யலாம். மாமரத்துக் கிளைகளில் அமர்ந்து கூவும் குயிலின் குரலும், மாளிகையின் முற்றத்தில் கார்கால வரவைக் கண்டு மகிழ்ச்சியுற்று அந்த வண்ணத் தோகை விரித்தாடும்

மயிலின் அகவுதலும் அந்த மழலைக் குரலின் இன்பத்தைத் தரவில்லையே !

குறு குறு நடந்து, சிறு கை நீட்டி, இட்டும் தொட்டும் துழந்தும், கவ்வியும், நெய்யுடை அடி சில், உடம்பு எல்லாம் பட்டு வழியுமாறு குழப்பிக் கொண்டு திரியும் சின்னஞ்சிறு குழந்தை தரும் கொள்ளை இன்பத்திற்கு ஈடு எது ? அதனால் தான் இன்பக் கதைகள் எல்லாம் உன்னைப்போல ஏடுகள் சொல்வதுண்டோ என ஒரு கவிஞர் பாடினார்.

மனித குலத்தை அன்பு, பாசம், பற்று, வாஞ்சை என்ற இணைப்புகளைக் கொண்டு வளர்ச்சி பெறச் செய்யும் இந்தக்குழந்தைக்காக தினகர் பல ஆண்டுகளாக ஏங்கிக் கொண்டு இருந்தார் . மேலும் சில ஆண்டுகளாக அவரது கவலையும், தவிப்பும் தொடர்ந்து இறுதியில் அவருக்கு கிடைத்தது ஒரு பெண் குழந்தை.

அதனை ஆண்டவனது அருட்பிரசாதமாகத்தான் அவர் எண்ணினார். அவரது கனவு நிறைவு பெற்றது

ஒல்லியான உடல், சற்று நீண்ட வட்ட முகத்தில் பளிச்சிடும் கருவிழிககள் , அழகிய வாய் , நாள் முழுவதும் அந்தக்குழந்தையைப் பாசமுடன் பார்த்துக் கொண்டிருப்பதே அவரது பொழுது போக்காக அமைந்தது . வறட்சி போல அவரது வாழ்வில் கவலையும் விரக்தியும், வளர்ந்து கொண்டு இருந்த பொழுது, அவரது வாழ்க்கையை இன்பமும், மகிழ்ச்சியும் பொங்க எழிலுடன் வந்த வசந்தமல்லவா அந்தக் குழந்தை !

ஆதனால் அந்தக் குழந்தைக்கு .வசந்த வேணி எனப்பெயரிட்டு அழைத்தார். ஐந்து வயதை எய்திய அந்தக் குழந்தைக்கு ஆங்கில செவிலியரை அமர்த்தி, ஆங்கில பாணியில் உடை உடுத்த, உணவுக்கூடத்தில் அமர்ந்து உணவு உண்ண, பழக்கப் படுத்தப்பட்டதுடன், ஆங்கில மொழியையும், பண்பாட்டையும் , சிறிது சிறிதாக அந்தச் செவிலியர் குழந்தை வசந்தாவிற்கு கற்றுக் கொடுத்து வந்தார். அடுத்து ஆங்கிலக்கல்வியை போதிக்க ஆங்கில ஆசானும் நியமிக்கப்பட்டார் .

அழகிய கவுன், உடுத்தி பூட்கம், சாக்கம் அணிந்து தலையை மேனாட்டுப் பாணியில் வாரி வண்ண ரிப்பன்களை அணிந்த அந்தக் குழந்தை மிடுக்காக நடந்து வந்து ,

"டாடி ! ஹவ் டு யூ டு" எனத் தந்தையை வினவும் பொழுது அப்படியே உச்சிகுளிர மகிழ்ந்து போவார்.

"ஹவ் டு யூ டு" என அவரும் மகிழ்ச்சியுடன் சொல்லிவிட்டு அப்படியே வசந்தத்தை வாரி எடுத்து முத்தமிடுவார்.

சிறுமி வசந்தம் ஆங்கிலமும் பிற பாடங்களும் கற்றுக் கொள்ள ஆசிரியர் இருவர் நியமனம் பெற்று இருந்தனர். மேலும் நேரம் தவறாமல் காலையிலும் மாலையிலும் கண்காணித்து, நீராட்டி, பல வகையான ஆயத்த ஆடைகளை அணிவிக்கவும், தலைவாரி, ரிப்பன் பிணைத்து கால்களில் வண்ண வண்ண காலணிகளைப் பூட்டி

அலங்காரம் செய்வதற்கும் ஆங்கிலம் அறிந்த இருதாதியரும் இருந்தனர் .

வசந்தத்திற்கு தேவையான ஆயத்த ஆடைகள், அலங்காரப் பொருட்களும் இங்கிலாந்திலிருந்து மாதந்தோறும் வரவழக்கப்பட்டன. ஏற்கனவே, இராம மந்திரம் மாளிகைக்கும் தினகருக்கும் தேவையான அணிமணிகள், வாசனைப்பொருட்கள், கண்ணாடி, கண்ணாடி பீங்கான், சிகிரெட், பிஸ்கட், ஆகிய பொருட்கள் பட்டியலை ஒவ்வொரு மாதமும் முன்கூட்டியே தாயரித்து சென்னையில் உள்ள ஸ்பென்ஸர் கம்பெனிக்கு அனுப்பி வைப்பதற்கும், அந்தப் பொருட்கள் அங்கிருந்து பெற்று வருவதற்கும் ஒரு மேலாளர் தனியாகப் பணியாற்றி வந்தார். ஆதலால் வசந்தத்திற்குத் தேவையான பொருட்களையும் சேர்த்து வரவழைப்பதில் சிரமம் எதுவும் ஏற்படவில்லை.

வண்ண வண்ண உடைகளை உடுத்திய அலங்காரத்துடன் சிறுமி மாளிகையில் இங்கும் அங்கும் புள்ளிமான் குட்டியைப் போல ஓடியாடி விளையாடித் திரிவதை கண்டு ஆனந்தம் கொள்ளும் தினகர், இராமமந்திரம் மாளிகையின் களையும் அழகுப் பொலிவும் அந்தச்சிறுமியினால் தான் ஏற்பட்டு இருப்பதாக உள்ளூர நினைத்து நினைத்து மகிழ்ச்சியடைவார். ஆனால் இந்த மகிழ்ச்சி நீண்ட காலத்திற்கு நிலைக்கவில்லையே !

அவரது அருகில் நீண்ட வளர்ந்த உயர்ந்த தேவதாரு மரங்களையும் கொன்றை மரங்களையும் பற்றி

பிடித்து வளரும் கொடி ரோஜா, மாதவிக் கொடி களைப் போல, மடமடவென வளர்ந்த யுவதியான அவரது அன்பு மகள் வசந்த வேணியின் இளமைப் பொழிலையும் கலை மகளும், திருமகளும் இணைந்து இருப்பது போன்ற முகக்களையையும் கண்டு களிக்க இயலாத அவரது கண்பார்வை பறி போயிற்று அல்லவா ? என்ன செய்வது? விதியின் சதிக்கு மாற்று . . . . ?

வசந்தவேணி அவர்முன் அமர்ந்த பியானோ வாத்தியத்தையோ அல்லது வயலினை வைத்துக் கொண்டு தந்தை மகிழத் தந்திகளை மீட்டி நாத இன்பத்தைப் பொழியும் பொழுது, இந்த ஏக்கமும் தவிப்பும் அவரது இதயத்தில் வேதனையை நிறைக்கும் . ஆனால் சில வினாடிகளிலேயே அந்த வேதனையை விட்டு இசைக் கருவி இயற்றும் இசை இன்பத்தில் மூழ்கிவிடுவார்.

அவரது ஆன்மாவின் எக்களிப்பு போன்றதும் அவருக்கு பிடித்தமான பியானோ வாத்தியம் முன் அமர்ந்து வசந்தவேணி பியானோக் கட்டைகளை தனது மெல்லிய விரர்களில் அழுத்தி மந்திர உச்சாடனம் போல அந்த வாத்தியக்கருவியின் இசையை ஆரோகன அவரோகன சுரங்களில் விதம் விதமான இனிய ஒலியை எழுப்பி இதயத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் துழாவி வரும் இசைப் பொழிவை , அதிலும் அவரே வாசித்து மகிழும் பாணியில் அந்த பியானோ பேசும் பொழுது அவர் அடையும் களிப்பும் குதூகலமும் எல்லையற்றதாக இருக்கும் . அக்பர் சக்ரவர்த்தியின் முன்னிலையில் அரசவை தான்சேன் தீபக் ராகத்தை இசைத்துப் பாடும் பொழுது அக்பர் சக்கரவர்த்திக்கு

ஏற்பட்ட இன்பத் தவிப்பு போல

சில சமயங்களில் தான் கற்றுத் தேர்ந்த வயலின் வாத்தியத்தையும் வசந்த வேணி, தந்தைக்கு இசைத்துக் காண்பிப்பார். குழந்தையைத் தோளில் சாய்த்து பற்றிக் கொள்ளும் தாயைப் போல வயலின் வாத்தியத்தை தனது இடது தோளில் நெஞ்சோடு அணைத்தவாறு அதன் தந்திகளில் அதன் வில்லைக் கொண்டு மிக மென்மையாகத் தடவுவது போல அழுத்தி இசைப்பார். நவரசங்களையும் எதிரொலிக்கும் அந்தக் கருவியின் தந்திகளில் குறிப்பாக அவலச் சுவையை மிக அற்புதமாக அன்றைய வீணை விற்பன்னர். தனம்மாளின் வீணையின் நாதத்தில் பிறக்காத புதுமையான சோகத்தின் நிரவல். மிக நளினமாக கேட்போர் காதுகளில் விளையாடும் குற்றாலத்தின் சாரலில் நாளெல்லாம் நனைந்து நடுநடுங்கிக் கொண்டிருக்கும் குயிலின் சோகம் மிகுந்த கூவுதலில் குழைத்து வரும் துன்ப இழைகளைப் போல அந்த வீணை இசையை கேட்போரின் இதய நாளங்களைச் சோக உணர்வு கண்டி இழுக்கும் .

புதிய புதிய கற்பனைகளில், பிர்க்காக்களில் நளினமாகச் சஞ்சரிக்கும் பேரலைகள் எழுந்து சிற்றலைகளாக குறுகி மனத்தின் தெம்பும் ஊட்டும் மெல்லிய தென்றல் போல பரவித் தவழும் அந்த வயலின் நாதத்தின் தினகர் அப்படியே சொக்கிப் போவார். வயலின் ஒலி நின்ற பொழுது வசந்த வேணிக்கு பாராட்டுச் சொல்லி அவரை அனுப்பிய பிறகும், சிறிது நேரம் அப்படியே தான் அனுபவித்து மகிழ்ந்த மகளின் இசைத்

திறமையை, அற்புதப் பயிற்சியை எண்ணி எண்ணி வியந்து போவார்.

இவ்வளவு சிறப்பாக, செம்மையாக இசைப் பியானோவையும் வயலினையும் கையாண்டு தம்மையே சொக்க வைக்கும் தமது அருமை மகளது ஆற்றலை நினைத்து நினைத்து அகமகிழும் தினகருக்கு, அவள் இசைக்கருவிகளில் கையாளும் பாங்கை, அவளது அரிய திறன் வாய்ந்த விரல்களின் இயக்கத்தை மெய்மறந்து வாசிக்கும் அவளது முக பாவத்தை கண்டு களிக்க முடியவில்லையே என்ற ஆதங்கமும் அவரது இதயத்தில் எழுந்து மறையும்.

அத்துடன் இன்னொரு கவலையும் அவரது சிந்தனையில் பளிச்சிடும். இத்தகைய கலைஞானம் வாய்க்கப் பெற்ற தமது மகளை, சாதாரணமான ஜமீன்தார் ஒருவரது மனைவியாக்கி விடாமல் நல்ல கலை ரசிகனும், நற்குணம் படைத்த இளைஞனைத் தேர்ந்தெடுத்து திருமணம் செய்து வைக்க வேண்டும் என்ற உறுதியும் அவருக்கு ஏற்பட்டது. எப்படி, எங்கே யார் மூலம் தேடுவது ? . . . . அதெல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம், இப்பொழுது . . . .

மகளது திறமையை, ஊர் அறிய, உலகம் வியக்கும் வண்ணம் செய்ய வேண்டும். கிம்பர்லி சுரங்கத்தின் கிடைத்த வைரமானாலும் அதனை சுத்தப்படுத்தி, நீரோட்டம் அறிந்து பட்டை தீட்டினால் தானே, பார்ப்பவரை மயக்கும் அழகும், ஒளிச்சேர்க்கையும் பெற்றுத்திகழும் ? ஆம், வசந்தவேணியை இராமமந்திரம்

மாளிகையில் தானே ஆர்வத்துடன் பயின்று, அற்புத வித்வாம்சினியாக விளங்கும் தமது மகளை ஒரு சிறந்த வாத்ய இசைக்கலைஞரிடம் அனுப்பி வைத்து, அவள் கற்ற வித்தைக்கு முழுமையான வடிவம் நல்கும் பயிற்சி பெறுமாறு செய்தல் மிகவும் அவசியம் என்பதை உணர்ந்தார்.

அன்று வயலின் சக்கரவத்தியாக விளங்கிய மைசூர் சௌடையாவிடம் அனுப்பி வைப்பது என்று முடிவு செய்து அதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டார் .





# மைசூரில் பயிற்சி

நமது நாட்டின் பூந்தோட்டம் என புகழ்ப்படும் பெருநகரம் கர்நாடக மாநிலத்தில் உள்ள மைசூர். மேற்கு மலைத்தொடரை மேற்கு எல்லையாகக் கொண்ட கேரளத்தின் கிழக்கு எல்லையையொட்டி இருப்பதால் இந்த நகரம் எழிலான இயற்கை வளத்தையும், இதமான கால நிலையையும் கொண்ட அழகு நகரமாம். இந்நகரை கி.பி.18ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை இந்த மாநிலத்தின் ஆட்சியாளர்களாக விளங்கிய உடையார்கள் தங்களது கோநகராகக் கொண்டிருந்தனர்.

வரிசை வரிசையான வீடுகளைக் கொண்ட விசாலமான வீதிகள் இடை இடையே மாளிகைகள், பூங்காக்கள், பரந்தமைதானங்கள், மிகச் சிறந்த வல்லுநர்களான ஸர்.மிர்சா இஸ்மாயில், ஸர்.விசுவேசுவரய்யா ஆகியவர்களது கைவண்ணத்தில்

உருவான பல கட்டுமானங்களைக் கொண்டு அமைதியும், ஆரவாரமற்ற சூழ்நிலையில் ஒளிர்ந்தது. இந்த நகரம் இங்கு தான் நமது நாட்டின் மெனுஉறினாக விளங்கிய வயலின் வித்தகர் சௌடையா வாழ்ந்து வந்தார்.

தமது அன்பு மகளின் வயலின் தேர்ச்சியைச் சரியாக கணித்து அவரது தேர்ச்சியை நிறைவுபடுத்தக் கூடியவர் இந்த மகா வித்வானே என முடிவு செய்தார் தினகர். செல்வி வசந்தவேணியையும் பணியாளர்களையும் கொண்ட அவரது கார் சில நாட்களில் மைசூர் சென்றடைந்தது.

இவர்களது தங்குமிடமாக ஒரு பெரிய மாளிகை அங்கு ஏற்பாடு செய்யப்பட்டது. செல்வி வசந்தவேணி, வித்வான் சௌடையாவின் நண்பர்களிடமிருந்து பெற்ற அறிமுகக் கடிதத்துடன் சென்று அவரைச் சந்தித்தார்.

இராமநாதபுரம் சமஸ்தானாதிபதியின் குடும்பத்தில் இப்படியொருவர் வயலின் இசையில் தேர்ச்சி பெற்று இருக்கிறாரா ? அறிமுகக் கடிதத்தைப் படித்தவுடன் வித்வானுக்கு ஏற்பட்ட ஐயம் இது.

அவர் குறிப்பிட்ட நேரத்தில் அடுத்த நாள் காலையில் அவரது இல்லத்தில் தனது வயலின் வாத்தியத்துடன் சென்ற செல்வி வசந்த வேணியை அவருக்கு பிடித்தவுடன் சில கீர்த்தனையை இசைத்துக் காட்டும்படி சொன்னார். செல்வி வசந்தவேணியும் பவ்யமாக குருவிற்கு நமஸ்க்காரம் செய்து விட்டு தரையில் அமர்ந்து தமது வயலினை மீட்டினார். யுவதியின் மெல்லிய விரல்கள் பட்ட வயலின் தந்திகள் தியாகரரது

பாடல்களை வாய்ப்பாட்டுவித்வான் பாடுவது போல பாடின . இசையில் ஆரோகனை அவரோகனம், ஆலாபனம் நிரவல் எல்லாம் மிகத் தெளிவாக எவ்விதப் பிசகும் இல்லாமல் வயலின் பேசின.

அரசு குடும்பத்தைச் சேர்ந்த ஒரு யுவதிக்கு இவ்வளவு சிறப்பான தேர்ச்சியா ? வித்வான் சௌடையா செல்வி வசந்தவேணியின் திறமையைக் கண்டு பிரமித்துப் போனார். தொடர்ந்து மூன்று நாட்கள் காலைப் பொழுதுதில் செல்வி வசந்தவேணியின் வயலின் இசையைக் கேட்போர் காதுகளிலும் இதயங்களிலும் தேன் அமுதாய்க் கொட்டி நிரப்பும் இந்த இராமநாதபுரம் யுவதிக்கு கடவுள் அளித்துள்ள கடாட்சத்தை எண்ணி வியந்தார்.

அவருக்கு புதிதாக பயிற்சி எதுவும் கொடுக்க வேண்டிய தேவை எதுவும் இல்லை என்றாலும், வீணை வாசிப்பில் அவர்கடைப்பிடித்து வந்த பாணியை மட்டும் சொல்லிக் கொடுத்தால் போதுமானது என முடிவு செய்தார். ஏறத்தாழ, அடுத்த மூன்று மாதங்களில் வித்வானது இல்லத்தில் எதிரும் புதிருமாக இருவரும் அமர்ந்து தங்களது வயலின் இசையில் பண்பட்ட சங்கீதப் பாங்கினை இசைத்து வந்தனர். முதலில் வித்வான் தமது வயலின் பத்து அல்லது பதினைந்து நிமிட காலத்தில், ராக சஞ்சாரத்தில் அவர் கையாண்ட கற்பனைகளை இசை நுணுக்கங்களை இசைத்துக் காண்பித்தார்.மிகவும் உன்னிப்பாக கேட்டு ஒலிப் பேழையில் பதிவு செய்தது போல, அடுத்த பத்து பதினைந்து நிமிடங்களில் செல்வி வசந்தவேணி அவரது வாசிப்பை அப்படியே இசைத்துக் காண்பிப்பார். பிரமித்துப் போன அவர் வாசிக்கும்

பொழுது, பல சபாஷ்களைச் சொல்லி மகிழ்ந்து போவார். தலையாய வித்வானும் தலை மாணவியும் இவ்விதம் இசை இன்பத்தைப் பரிமாறி வந்தனர்.

வித்வானது சிறப்பான பாணிகளைத் தெளிவாகத் தெரிந்து கொண்டதில் மாணவிக்கும் மகிழ்ச்சி, மிகச் சிறந்த தேர்ச்சி பெற்றுள்ள மாணவிக்கு மேலும் சில இசை நுணுக்கங்களைக் கற்றுக்கொடுத்ததில் குருவிற்கும் மன நிறைவு.

ஒரு நாள் மாலைப் பொழுதில் , செல்வி வசந்தவேணி வித்வானது இல்லத்தில் பழக் கூடைகளுடன் சென்றார் . அவரை வணங்கி, ஊர் திரும்புவதற்கு ஆசி பெற்றார். அப்பொழுது அவருக்கு குரு தட்சணையாகக் கொடுப்பதற்கு தந்தை தினகர் சேதுபதி அனுப்பி வைத்து இருந்த நூறு ரூபாய் நோட்டுகளைக் கொண்ட உறை ஒன்றையும் வித்வானிடம் சேர்ப்பித்தார். மகிழ்ச்சியுடன் அதனை ஏற்றுக் கொண்ட வித்வான் செல்வி வசந்தவேணியை வாழ்த்தி விடை கொடுத்தார். நாடு புகழும் சிறந்த வயலின் இசை வித்வாம்சினியாக செல்வி வசந்தவேணி உயர்வு பெற வேண்டும் என்பதே வித்வான் சௌடய்யாவின் வாழ்த்து .

இராமநாதபுரம் குழுவினர் மைசூரை விட்டு புறப்பட்டனர். வழியில் சாமுண்டீசுவரி ஆலயம், ஸ்ரீ ரங்கப்பட்டிணம் கோட்டை, இணையற்ற தியாகி திப்பு சுல்தானின் தரியாதவுலத் அரண்மனை, அவரது அடக்கவிடம் காவேரியின் சங்கமம், ஆகிய சுற்றுலாத் தலங்களையும். கண்டு களித்து விட்டு இராமமந்திரம் திரும்பினர்.

மூன்று மாத இடைவெளியில் அன்பு மகளைப் பிரிந்த இருந்த தந்தை தினகருக்கு இப்பொழுது மட்டற்ற மகிழ்ச்சி.

மைசூர் பயணத்தையும் மைசூரில் வித்வான சௌடையாவிடம் கற்றுக் தேர்ந்தவைகளை தந்தைக்குச் சொல்லிக் காண்பித்தார் செல்வி வசந்தவேணி.

சிலநேரங்களில் மைசூர் வித்வானது பிர்க்காக்களை (பாணிகளை) தமது வயலினில் இசைத்துக்காட்டி இசைவாணராகிய தந்தை பரவசம் கொள்ளச் செய்வார் அந்த அன்பு மகள்.





# வாழ்வில் காரிருள்

வாழ்க்கைச் சக்கரங்களின் வேகம் குறைந்தது. சிலந்திப் பின்னல் போல சிந்தனைகள் கவலைகளின் இறுக்கம். இடையிடையே பொதுப்பணியில் ஈடுபடும் பொழுது ஒரு சிலிர்ப்பு : ஒரு புதிய உத்வேகம். இராமநாதபுரம் அரண்மனையிலிருந்து இரட்டைக்குதிரைகள் பூட்டிய நான்கு சக்கர பீட்டன் வண்டி அல்லது கார் இராமமந்திரத்திற்கு வரும். அதில் அமர்ந்து சென்று திவான் பணிகளைப் முடித்து விட்டு தினகர் திரும்புவார்.

வேறு சில சமயங்களில் யூனியன் போர்டு அலுவலகத்திற்கு சென்று வருவார். அன்றைய நிலையில், கிராமங்களுக்கு ஊராட்சியும் நகரங்களுக்கு பேரூராட்சி அல்லது நகராட்சி அமைப்புக்களும் ஏற்படாத காலகட்டம், இராமநாதபுரம் நகர் சாலை வசதி, சுகாதாரம், கல்வி வசதி இரவு விளக்கு வசதி போன்றவைகளை அமைத்துப்

பராமரித்து வரவேண்டிய பொறுப்பு யூனியன் போர்டிடம் இருந்தது. அந்த அலுவலகத்தின் வரும்பொழுது தினகர் அவரது சொந்தக் குதிரையில் வந்து செல்வார். அலுவலகப் பணியை முடித்தவுடன் குதிரையில் அமர்ந்து இராமநாதபுரம் நகர் வீதிகளில் வலம்வந்து மக்களது குறைபாடுகளை நேரில் கண்டு கேட்டறியும் வாய்ப்பாக இந்த உலாவை அவர் மேற்கொண்டார். அப்பொழுது மக்கள் மரியாதையுடன் தினகரரை வரவேற்று தங்களது பகுதி குறைகளைக் தயக்கமின்றி எடுத்துச் சொல்வார்கள். அவரும் அந்தக் குறைபாடுகள் பற்றி போர்டு உறுப்பினர்களுடன் கலந்து குறைபாடுகள் நிவர்த்தி பெற உதவுவார். மிகுதியான நிதி ஆதாரங்கள் தேவைப்படும் குறைபாடுகளை மதுரையில் உள்ள இராமநாதபுரம் ஜில்லா கலெக்டரை அறிக்கை மூலமும் அவசரமாக பிரச்சனைகளுக்கு நேரில் சென்றும் கலெக்டரை பேட்டிகண்டு பேசியும் தக்க ஆணைகளைப் பெற்று வருதலும் உண்டு. கி.பி.1857ல் வட மாநிலங்களின் ஏற்பட்ட சிப்பாய்களது கிளர்ச்சியை அடுத்து கும்பெனியாரது கவர்னர் ஜெனரலாக இருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் மீதான மிக மோசமான ஊழல் விசாரணை போன்ற நிகழ்வுகளினால் ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியாரது நிர்வாகத்தில் இருந்த இந்தியத் துணைக் கண்டத்தின் துரைத் தனத்தை இங்கிலாந்து நாட்டின் ஆங்கில அரசு ஏற்றுக்கொண்டது. இங்கிலாந்து நாட்டு அரசி விக்டோரியாவை இந்திய துணைக் கண்டத்தின் சக்கரவர்த்தினியாக அறிவிப்புச் செய்தது. தமிழ் மாநிலத்தைப் பொறுத்த வரையில் தலத்தாபன அமைப்பு போன்ற மக்கள் பிரதிநிதித்துவம் நிர்வாகத்தில் ஏற்படுமாறு சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. தொடர்ந்து

சீமைகளும் ஜமீன்தாரிப் பகுதிகளும் . இணைத்து ஜில்லாக்கள் ஏற்படுத்தப்பட்டன.

அதுவரை மதுரைச் சீமையின் அங்கமாக இருந்த இராமநாதபுரம் , சிவங்கை , ஜமீன்தாரிப் பகுதிகள் ஒரே ஜில்லாவாக அறிவிக்கப்பட்டன. இந்த ஜில்லாவின் நிர்வாக நலனை கருத்திற்கொண்டு திருநெல்வேலி சீமையின் சாத்தூர், ஸ்ரீ வில்லிபுத்தூர் தாலுக்காக்களும் மதுரைச்சீமையின் திருப்பத்தூர், தாலுகாவையும் புதிய இராமநாதபுரம் ஜில்லாவில் இணைத்து புதிய கலெக்டர் ஒருவரது தலைமையிடமாகக் கொண்டு கி.பி.1910ல் புதிய நிர்வாகம் மதுரையைத் தலைமையிடமாகக் கொண்டு இயங்கத் தொடங்கியது. இந்தப் புதிய நிர்வாக அமைப்பில் ஏற்படும் மக்கள் பிரச்சனைகளுக்கு மதுரையில் இருந்த இராமநாதபுரம் ஜில்லா கலெக்டர் தக்க தீர்வுகளை வழங்கி வந்தார் .

இத்தகைய சூழ்நிலையில் தான் இராமநாதபுரம் சமஸ்தான திவான் என்ற முறையிலும் இராமநாதபுரம் நகர் போர்டு தலைவர் என்ற முறையிலும் இராமநாதபுரம் ஜில்லா கலெக்டரைப் பேட்டிகாண ஒரு நாள் மதுரை நகருக்குச் சென்றார் . ஜில்லா கலெக்டரைப் பேட்டி கண்டு இராமநாதபுரம் நகர் தேவைகளை எடுத்துக் கூறியதும் அதற்கான தீர்வு ஆணையை விரைவில் அனுப்பி வைப்பதாக கலெக்டர் தினகரிடம் சொன்னவுடன், அவர் தல்லாகுளத்திலிருந்து குருவிக்காரன் சாலைவழியாக தெப்பக்குளம் பகுதியில் உள்ள சேதுபதி மன்னர் மாளிகைக்குத் திருப்பிக்கொண்டு இருந்தார். அப்பொழுது தான் அவரது வாழ்வைக் குலைக்கும் விபத்து

நிகழ்ந்தது. ஆம், விபத்து அதனை பேராபத்து என்று தான் குறிப்பிட வேண்டும்.

அப்பொழுது நல்ல உச்சிப்பொழுது திடீரென்று ஒரு சுழல் காற்றுதோன்றியது. வீதியில் கிடந்த குப்பை கூளம், புழுதியெல்லாம் உயிர்பெற்று எழுந்து நடனம் ஆடியது போல சுழன்றது . மிகுந்த வெப்பம் காரணமாக காற்று சூடாகி, வெம்மையினால் சுழலத் தொடங்கியது . தரையில் இருந்து ஒரு பனை உயரம் வரை சுழன்று சுழன்று அடித்த புழுதிக்காற்று விரைவாக அப்படியே நகர்ந்து கொண்டே இருந்தது. குப்பைகள், கழிவுகள் தூண் போன்று எழுந்து சுழன்று சென்றது. குதிரையில் இருந்த தினகரரை அந்த சுழல் கடந்து சென்றது. பேய்த் தேர் என வழங்கப்படும் இந்தக் காற்று காட்சியை ஒரு நொடி நேரம் இமை கொட்டாமல் பார்த்தார் . அதற்கு மேல் அவரால் அந்த பேய்த் தேரைப் பார்க்க இயலவில்லை. அவரது கண்களில் தூசு புகுந்து நிறைந்து விட்டது .

கண்ணைக் கசக்கியவாறு தெப்பக்குளம் மாளிகை வந்து சேர்ந்தார் கண்கனைக் குளிர்ந்த நீரால் கழுவிய பிறகு கண்ணாடியில் கண்களை பார்த்தார். கோவைப் பழம் போன்று சிவந்த இடது கண்ணில் பொறுக்க முடியாத வலியும் ஏற்பட்டது .

மதுரைச் சீமையில் உள்ள மருத்துவர்கள் பலர் வரவழைக்கப்பட்டனர் . அவர்கள் தினகரரது கண்ணைப் பரிசோதித்தனர். மூலிகைகள், மருந்து, வேது பிடித்தல் எனப் பலவித முயற்சிகளால் கண்வலியை நீக்குவதற்கு அவர்கள் முயற்சிகள் மேற்கொண்டனர். என்றாலும் கண்ணில் வலி, உறுத்தல், கண்ணில் இருந்து நீர் வடிதல்,

ஆகியன சற்று குறைந்தது. ஆனால் அந்தக் கண்ணில் பார்வையில்லை. சென்னையில் உள்ள நண்பர்களுக்கு தந்திகள் சென்றன. சென்னையில் இருந்து லண்டனுக்கும் செய்தி தந்தியில் பறந்தன. கண் மருத்தவர் ஒருவர் ஒரு மாத காலத்தில் இராமநாதபுரத்திற்கு வந்து சேர்வதாக தகவல் கிடைத்தது. விமானப் போக்குவரத்து அரிதாக உள்ள அந்தக் காலத்தில் உடனடியாக மருத்துவர் வர வாய்ப்பு இல்லாதநிலை.

தினகர் மதுரையில் இருந்து புறப்பட்டு இராமநர்தபுரம் வந்தார். லண்டன் மருத்துவ்ரது வருகையை எதிர்பார்த்து நம்பிக்கையோடு காத்திருந்தார். மகாராஜா விரைவில் கண் பார்வை பெற பல நேர்த்திக்கடன்களை அவரது பணியாளர்கள் நிறைவேற்றினர். குறிப்பிட்ட நாள் அன்று நடுப் பகலில் சென்னையில் இருந்து தனுஷ்கோடி செல்லும் ரயில் வண்டியில் வரும் டாக்டர் துரையை அழைத்து வர இராமமந்திரத்தில் இருந்து கார் சென்றது . சிறிது நேரம் கழித்து ரயில் நிலையத்தில் இருந்து கார் திரும்பி வந்தது. நம்பிக்கை நட்சத்திரமாக எதிர்பார்க்கப்பட்ட லண்டன் டாக்டர் கைப்பெட்டியுடன் இராமமந்திரத்திற்கு வந்தார் . அவரைக் கை குலுக்கி வரவேற்றார் தினகர். மருத்துவருக்கு குளிர்பானம் (ஷர்பத்) வழங்கப்பட்டது. பின்னர் மருத்துவரிடம் பயணம் பற்றி விசாரித்து விட்டு கண்ணில் புழுதி புகுந்த வலி ஏற்பட்ட விவரத்தையும் நாட்டு வைத்தியர்கள் மருத்துவம் செய்துள்ளதையும் தெரிவித்தார். மௌனமாக கேட்டுக் கொண்டிருந்த லண்டன் மருத்துவர், தினகரரை நாற்காலியில்

படுத்துக்கொள்ளுமாறு சொல்லி அவரது கண்களைப் பரிசோதித்தார். வெந்நீரால் அவரது கண்களைக் கழுவி சுத்தம் செய்து விட்டு இரண்டு புட்டிகளில் இருந்த மருந்தை ஒரு குப்பியில் ஊற்றி கலந்தார். பின்னர் அந்தக் கலவையை ஒரு ரப்பர் பில்லரில் நிறைத்து தினகரரது கண்ணில் செலுத்தினார்.

அவ்வளவு தான் இராமமந்திரம் மாளிகை எதிரொலிக்கும் வகையில் தினகரர் அலறினார். வலி, எரிச்சலால் துடித்தார். அந்த அளவுக்கு கண்ணில் தாங்க முடியாத வலி. ஏற்கனவே வலியை நீக்க பயன்படுத்தப்பட்ட மருந்தினால் புதிய வலி ஏற்பட்டது. வைத்தியருக்கு ஒன்றும் புரியவில்லை. சிறு வினாடிகள் சென்றன.

"பாதிக்கப்பட்ட கண் எது" ? என ஆங்கிலத்தில் கேட்டார் மருத்துவர். முதலில் கேட்டிருக்க வேண்டிய கேள்வி. இடது கண் என தினகரர் பதில் அளித்தார். லண்டனில் மருத்துவருக்கு ஒரே திகைப்பு. குற்ற உணர்வினால் நடுக்கம்.

"ஐ ஆம் சாரி. மகராஜா" தழுதழுத்த குரலில். பாதிக்கப்பட்ட இடது கண்ணில் ஊற்ற வேண்டிய மருந்தை தவறுதலாக வலது கண்ணில் ஊற்றி விட்டார். வலது கண்ணினாலும் பார்க்க முடியாத நிலை. அந்தக் கண்ணின் பார்வையும் பறிபோய்விட்டது. இதனை விதியின் விளையாட்டு என்றே சொல்லவேண்டும். பின்னர் ஒரு ஊசி மருந்தை தினகரரது வலது கண்ணின் கீழ்ப்பகுதியில் செலுத்தினார்.

வலி விரைவில் குறைந்தது, விழி திறக்கவில்லை. திறப்பதற்கான வாய்ப்பும் இல்லை . ஊழின் வலிமையை யாரால் தடுத்து நிறுத்த முடியும்? மனித நினைவுகளையும் நம்பிக்கைகளையும் நிமிட நேரத்தில் பாழாக்கும். ஊழ் என்ற விதியின் பேரிழப்பினைத் தடுக்கும் பேராற்றலை மனிதன் இதுவரை பெறவில்லை ! தினகரரது இரு கண்களும் பாதிக்கப்படவேண்டியவை என்பது விதியின் நியதி. அதனைச் செய்து முடிப்பதற்கு ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து மருத்துவர் ஒருவர் வரவேண்டியதாக இருந்தது ! மருத்துவர் வந்தார். விதியின் விளையாட்டை முடித்துச் சென்றார்.

கொடுமையிலும் கொடுமை ! வீடு வெந்த பிறகு யாருக்கு என்ன பயன் தினகர் மௌனமானார். திகைப்பினால் என்ன செய்வது ! என்ன செய்வது என்று புலம்பித் தவித்தார். சில நிமிடங்களில் மனத் தேறுதலைப் பெற்றார். விதி விளையாடி விட்டதை உணர்ந்தார்.

தமது உதவியாளரை அழைத்து டாக்டரை டைனிங் ஹாலுக்கு அழைத்துச் சென்று "லஞ்ச் " அளிக்கும்படி பணித்தார்.

டாக்டர் உணவிற்கு செல்ல மறுத்து விட்டதுடன், அன்று மாலையிலேயே சென்னை திரும்புவதாகச் சொல்லி தினகரரிடம் விடைபெற்றார். அவர் இராமநாதபுரத்தில் தங்குவதால் யாருக்கும் எந்தப் பயனும் இல்லை. இராமமந்திரத்திலிருந்து மருத்துவரை ஏற்றிக்கொண்டு தினகரது கார் இராமநாதபுரம் ரயில்வே நிலையம் புறப்பட்டது.

நீண்ட நேரம் மௌனமாக அமர்ந்திருந்த தினகர், மாளிகையின் முகப்பிற்குச் செல்ல எழுந்தவுடன் அவரது உதவியாளர் அவரைப் பற்றி மாளிகை முகப்பில் வரிசை வரிசையாக வைக்கப்படிருந்த பூந்தொட்டிகளுக்கு அருகில் சாய்வு நாற்காலியைப் போட்டு அதில் அமருவதற்கு உதவினார்.

மன்னவர் கன்னியராய் மங்கையராய், மைந்தர் நடந்து வருவது போன்ற மென்மையான தென்றல் காற்றின் சில சிலுப்பில் தினரது மௌனம் கலைந்தது. இறைவனது நாமத்தை உச்சரித்து, அவருக்கு ஏற்பட்ட அவலத்திற்கு தீர்வு காண்பதற்கு முயன்றார் .

நொந்து போன மனத்திற்கு ஆறுதல் அளிக்கவல்ல அரியமாற்று இறைவனது நாமம் தானே !





# தந்தையும் மகளும்

நாட்கள் நழுவி மறைந்தன. நேற்று நடந்து போல நிகழ்ந்த கண் வைத்தியமும் லண்டன் மருத்துவரது பாதிக்கப்பட்ட இடது கண்ணிற்குப் பதில் தவறாக வலது கண்ணில் மருந்தைப்புகுத்தி இருந்த கண்பார்வையையும் இழக்கச் செய்தது ஆகியன தினகரது சிந்தனையில் மேலும் விரக்தியை நிறைத்து அவரை ஒரு வேதாந்திபோல மாறச்செய்தது . இதனால் எப்பொழுதும் அமைதி நிறைந்து விளங்கும் அவரது மாளிகையில், ஒரு செயற்கையான சூழ்நிலை நிலவியது.

ஒவ்வொரு பகுதியும் எப்படி இருக்க வேண்டும் எனத் திட்டமிட்டு அமைத்த இராமமந்திரம் மாளிகையில் நடமாட்டமே இல்லாமல் முகப்பில் சோபாவில் தினகர் அமர்ந்து மென்மையாகத் தவழ்ந்து வரும் காற்றை அனுபவித்தவாறு முடங்கிப்போய் இருந்தார்.

அவரது ஆத்மாவின் எதிரொலி போல இசைக்கப்படும் பியானோ வாத்தியம் தூசு படிந்து காணப்பட்டது.

நூலக அறையும் ஒருமாதத்திற்கு மேலாக மூடிக்கிடந்தது. நூல்களைப் படித்துச் சுவைப்பதற்க்கு கண்ணொளி இல்லையே ! அவருக்கு !

அவரது வளர்ப்பு நாய், குதிரை, மயில், அனைத்தும் அந்தச் புதிய மௌன சூழ்நிலையின் சாட்சிகளாக இருந்தன.

எங்கும் விரைவு, விறுவிறுப்பு, ஒழுங்கான செயல்பாடுகள், களிப்பு, சிரிப்பு, எதுவும் இல்லாத கனவு உலகம் போல அந்த மாளிகை வளாகம் முடிவில்லாத அமைதியாகக் காணப்பட்டது.

இப்பொழுதெல்லாம் தினகரது அன்றாட அலுவல்களில் பெரும் மாற்றமிருந்தது. முன்பு போல வைகறைப் பொழுதில் பூஜை அறையில் அமர்ந்து தேவார திருவாசகத்தை நீண்ட நேரம் பாராயணம் செய்தது. பூஜை மேடையில் வைக்கப்பட்டுள்ள சிவபெருமான் படம் வானில் இருந்து இறங்கும் கங்கையைத் தாங்குவதற்காக புலித்தோல்போர்த்திய இடையில் இருகைகளையும் வைத்துக்கொண்டு விரித்த சடை முடியுடன் ஆகாயத்தை நோக்கியவாறு நிற்கும் சிவபெருமானது படத்திற்கும் இராமபிரான் சீதையுடன் அமர்ந்து இலக்குவன் அனுமன், வீடனன், அங்கதன், வசிட்டர் ஆகியோருடன் காட்சியளிக்கும் பட்டாபிசேக இராமர் படத்திற்கு அவரது

தோட்டத்து மலர்களில் தொடுத்த கதம்ப மாலையை சார்த்துதல். பூஜையில் கலந்த மாளிகைப் பணியாளர்களுக்கு தனது கையாலேயே நைவேத்திய பிரசாதங்களை வழங்குவது போன்றவைகளை அவர் இப்பொழுது செய்வதில்லை. இவைகளைச் செய்வதற்காக சிவப்பிராம்மணர் ஒருவர் நியமனம் செய்யப்படுதல் என்றாலும் "நமச்சிவாய வாழ்க, நாதன்தாள் வாழ்க" என்ற மணிவாசகரது சிவபராயணத்தைச் சொல்லி முடித்தவுடன் அவரது காலை பூஜை முடிந்துவிடும்.

பணியாளரது உதவியுடன் மாளிகை முகப்பிற்கு வந்து சோபாவில் அமர்ந்ததும் காபிக் கோப்பையைக் கொண்டு வந்து கொடுப்பார்கள். அதனைப் பருகியவாறு வானொலி கேட்பார்.

காலைநேரம் சென்று விடும். காலைச் சிற்றுண்டி முடித்துவிட்டு மீண்டும் முகப்பிற்கு வந்து அமர்ந்துவிடுவார். நடுப்பகல்வரை மௌனம்.

இடையில் யாராவது வந்து உதவி கோரினால் அனுதாயத்துடன் அவர்களுக்கு வேண்டிய பொருள் கொடுத்து அனுப்பிவைப்பார் அல்லது அவர்கள் விரும்பும் யாராவது பெரிய மனிதருக்கு பரிந்துரைக் கடிதம் அளித்து அனுப்பிவைப்பார். சில ஏழை எளியவர்களது வந்து தினகரை சேவித்து நிற்பர்.

அவர்களைச் சமையல் கட்டிற்கு அழைத்துக் கொண்டு வயிறார சாப்பிடுமாறு செய்து சேலையும் வேட்டியும் கொடுத்து வழிச்செலவிற்குச் சிறிது பணமும்

கொடுத்து அனுப்புவது வழக்கம். இதற்காக இராமநாதபுரம் மாளிகையின் ஒரு அறையில் எப்பொழுதும் அருப்புக்கோட்டை நூல் சேலைகளும் வேட்டிகளும் குவித்து வைக்கப்பட்டு இருக்கும்.

தினகரது கண்பார்வையில் ஊனம் ஏற்பட்டாலும் அவரது உள்ளத்தில் உறைந்து இருந்த ஈரத்திற்கும் பரிவணர்விற்கும் குறை ஏற்படவே இல்லை. அன்றறிவாம் என்னாது அறம் செய்க, பொன்றுங்கால் பொன்றாத்துணை என்ற வள்ளுவத்தின் வல்லமையை அறிந்தவர் அல்லவா, அதனால் அவரது மாளிகையில் அஞ்சேல் என்ற சொல்லுக்கு பஞ்சமில்லை. அவ்ரது உயர்ந்த தலைவாசல் கதவுகளும் திறக்கப்பட்டே இருக்கும்.

மாலை நேரம்

மாளிகைக்குள் இருந்து அவரது அருமை மகள் "டாடி! டாடி1 அழைப்புக் கேட்டதும் அவரது மௌன சிந்தனை கலைந்தோடி விழும்.

"என்ன டார்லிங் !" மறுமொழி.

"ரொம்நாளாகுது வாக்கிங் போய் "

இப்பொழுது போகலாமா, வசந்த்த்தின் கேள்வி தனது சோபாவின் அருகில் மேனாட்டுப் பாணியில் அணிந்து ஷுவும் ஷாக்ஸும் போட்டுக் கொண்டு பாப் செய்த தலையுடன் நிற்கும் வசந்தத்தை அனைத்து தமது மடியில் அமரவைத்து அந்தச் சிறுமியின் தலை, கவுன் ஆகியவைகளைத் தொட்டுத் தடவிப் பார்த்து விட்டு,

" வெரிகுட் . . . . ஓ வாக்கிங்கிற்கு ரெடியாக வந்துட்டியே ! . . . . சரி போகலாம் "
வசந்தத்தின் கைகளைப் கைகளைப் பற்றிக்கொண்டு மாளிகைக்கு கூப்பிடு தூரத்தில் உள்ள தாமரைக் குளத்திற்குச் சென்றார்.

குளத்தங்கரையின் புல் படர்ந்துள்ள பகுதியில் மரம் ஒன்று நீண்டு வளர்ந்து நின்றது. அதன் நிழலில் போடப்பட்டிருந்த இரு நாற்காலிகளில் இருவரும் அமர்ந்தனர். அரசமரத்தின் அகன்று கறுகிய மெல்லிய இலைகள் மாலைக் காற்றில் சலசலவென பறவைகளின் சிறகடிக்கும் ஓசை போல ஒலித்தன.

அந்த தாமரைக்குளத்தில் தண்ணீரே இல்லையென்று சொல்லும் அளவிற்கு தண்ணீர் மட்டத்தை தாமரை இலைகளும் மடல்விரிந்த பூக்களும் நிறைந்து அழகாகக் காட்சியளித்தன . அந்த குளத்தின் ஈரத்தையும் மலர்களின் மணத்தையும் மாலைத்தென்றல் எடுத்து வந்து தெளித்தது .

"டாடி அதோ இரண்டு கொக்குகள் தாமரை மலர்களின் மீது அமர்ந்து இருக்கு ! "

" அப்படியா மாலை நேரத்திதை மென்மையாக மலர்களில் சொகுசாக அமர்ந்து அனுபவித்து வருகின்றன. இன்னொரு கருப்பு நிற பறவை இருக்கிறதா. அதன் பெயர் நீர்க்காக்கை. நாள் முழுவதும் தாமரைக்குளத்து மூழ்கி வெளிவந்து விளையாடும் -அது இருக்கிறதா ? "
" இல்லை, டாடி இனிமேல் பார்த்தால் சொல்கிறேன். "
குழந்தை வசந்தத்தின் பதில்.

இவ்விதம் தந்தையும் மகளும் உரையாடியவாறு பொழுது போக்குவார்கள்

சில நேரங்களில் வசந்தம் புதிதாகக் கற்ற ஆங்கிலப் பாடல்களை (ரைம்ஸ்) பாடச் சொல்லிக் கேட்பதும் உண்டு. அந்தப் பாடலின் சொற்களை எவ்விதம் அழுத்தமாவும் சரியாகவும் உச்சரிக்க கேட்டும் என்பதையும் கூறிவிட்டு அந்தப் பாட்ல்களில் வரும் சிங்கம், நரி, பூனை போன்ற விலங்குகளைப் போலவே தனது குரலை மாற்றிப் பேசுவார்.

குழந்தை அதைக்கேட்டு ரசிக்கும் பொழுது அவரும் சேர்ந்து விலங்குகளைப் போலவே தனது குரலை மாற்றிப்பேசுவார்.

குழந்தை அதைக்கேட்டு ரசித்துச் சிரிக்கும் பொழுது அவரும் சேர்ந்து வாய் விட்டு சிரிப்பார்.

சிறிது நேரங்கழித்து கேட்டார்.

"ஏம்மா ! பொழுது அடைந்து விட்டதா ,"

"இல்லை டாடி இப்பொழுது தான் மேற்கே சூரியன் மறையத்தொடங்குகிறது ". இன்னும் மாலை வெளிச்சம் இருக்கிறது !"

"சரி நாம் பங்களாவிற்குப் போவோம் !"

தினகர் நாற்காலியில் இருந்து எழுந்தார். சிறுமி வசந்தம் அவரது அன்புக்கரங்களை பற்றியவாறு பங்களாநோக்கி நடக்கத்தொடங்கினாள்.

" மகாராஜா ! கும்பிடுகிறேன் "

" டாடி நம்ம கார்டனர் முத்தையா கும்பிடுகிறார் "

"என்ன முத்தையா , கொடைக்காலில் இருந்து வந்ததே ரோஜா பதியம் வேர்பிடித்து விட்டதா ? தவறாமல் தண்ணீர் ஊற்றிவா . மனோரஞ்சிதம் இன்னும் மடல் விரியவில்லை . மனத்தைக்காணோமே ! சம்பங்கி பதியத்தில் நீர் தேங்காமல் பார்த்துக்கொள் , என்ன புரிகிறதா ?

"உத்திரவு மகாராஜா ! இதோ குண்டுமல்லிகை நன்கு மலர்ந்து விட்டது ! " என்று கூறியவாறு சில பூக்களை தினகரிடம் பவ்யமாக கொடுத்தார் தோட்டக்காரர் .

"நன்றாக மணக்கிறது, இது தங்கச்சிமடத்தில் இருந்து கொண்டுவந்தது தானே !"

" ஆமாம் மகாராஜா ! "

" சரி உனது வேலையைப் பார் !"

தினகரும் சிறுமி வசந்தத்துடன் பங்களாவிற்குத் திரும்பினார்.

" டாடி ! இப்படி சோபாவில் உட்காருங்கள், ட்யூசனுக்கு டியட்டர் வந்திருக்கிறார். நான் நாச்சியார் அம்மாவை இங்கு வரச் சொல்லிவிட்டு படிக்கப் போககிறேன். "

" நல்லது டார்லிங். நான் இங்கு இருக்கிறேன். நீ படித்து முடித்து வந்தவுடன் டைனிங் ஹாலுக்கு போகலாம்".

அடுத்து நாச்சியார் அம்மாள் வந்தார்கள் ! சிறுமி வசந்தத்தை விடப் பத்து வயது கூடுதல். தினகரது தேவைகளைத் தெரிந்து உற்ற தாய் போல பணியாற்றுபவர். மேலும் அவரது எழுத்துப்பணிக்கு மிகவும் உதவிவந்தவர்.

எந்த நேரத்திலும் தினகரிடம் நோட்டுப்புத்தகத்துடன், பேனாவுடன் வந்து நிற்பார்.

அவரது நூலகத்தில் இருந்து நூல் எதையும் படித்துப் பார்க்க வேண்டுமென்றால் " நாச்சியார் பெரிய பிரோவில் மேல் தட்டில் முதல் வரிசையில் நீலநிற அட்டை போட்ட பெரிய புத்தகம் இருக்கு. அதை எடுத்து வாருங்கள் " என்று சொன்னவுடன் அதனை அவர் எடுத்துவருவார்.

"அது பகவத் கீதைதானே சரி. பதினைந்தாவது அத்தியாயத்தில் " கர்மா " பற்றிய உபதேசத்தைப் படியுங்கள் " என்றவுடன் அந்தப் பகுதியை படித்துக் காண்பிப்பார்.

மேலும் தினகரது எண்ணங்களை எழுத்தாக வரைந்து கொடுப்பதிலும் நூல்களில் விரும்பிய பகுதிகளை உடனுக்குடன் வாசித்துக் காட்டியும் உதவிவந்தார் .

" மகாராஜா ! தங்கள் அறைக்குப் போகலாமா ? லஸ்தர் விளக்குகள் ஏற்றப்பட்டு விட்டன " நாச்சியார் கேட்டார்.

" இல்லை . இங்கேயே இருக்கிறேன் . ட்யூஷன் முடித்து வசந்தம் வந்தவுடன் டைனிங் ஹாலுக்கு போய்விட்டு அறைக்குள் போகலாம்.

" உத்திரவு மகாராஜா !. தங்களது மேலங்கியை எடுத்துவிடவா பனியனுக்கு மேல் அங்கவஸ்திரத்தை போட்டுக்கொள்ளலாம் ! "

" அதுவும் சரிதான் உடம்பில் காற்று நன்றாகப் படும் ".

நாச்சியார் தினகரது ஓவர்கோட்டை பெற்றுக் கொண்டு அவரது அறைக்குச் சென்றார்.





# சமரச வாழ்வு

மு ற்பகல் நேரம், வழக்கம் போல தினகர் முகப்புக் கூட சோபாவில் தினகர் அமர்ந்து எதைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருந்தார். கூடத்தில் வெளியே பணியாள் ஒருவர் தினகரது உத்திரவிற்கு காத்துக் கொண்டிருந்தார்.

" மங்களம் ! " கம்பீரமான குரல்.

" மகாராஜா ! உத்திரவு " பணியாள் மங்களம் முகப்பில் இருந்து கூடத்திற்குள் வந்து பவ்யமாக நின்றார்.

" பின் கட்டிற்குப் போய் லாயத்தில் உள்ள குதிரைக்கு புதிய புல் போடப்பட்டிருக்கிறதா. காலையில் கொள்ளு கொடுக்கப்பட்டதா என்பதை குதிரைச் சேவகரிடம் கேட்டுத் தெரிந்து வா. அத்துடன் குதிரையின் பிடரியில் வேனல் கட்டி போன்ற சிறிய வீக்கம் இருந்தது. எப்படி இருக்கிறது என்பதையும் பார்த்துவா " தினகரது கட்டளை.

" உத்தரவு ! " என்று சொல்லி பணியாள் மங்களம் பின் கட்டிற்குச் சென்றார் .

சிறிது நேரம் கழித்து வந்து, குதிரைக்கு காலையில் கொள்ளு வைக்கப்பட்டதாகவும், தற்சமயம் புதிய புல் போடப்பட்டு அதனை குதிரை கடித்துக் கொண்டு இருக்கிறதென்றும் குதிரையின் புடரியில் இருந்து கட்டி குறைந்து சிறிதாக இருக்கிறது என்பதையும் வந்து தெரிவித்தார்.

" நல்லது, நாளைக் காலையிலும் குதிரை லாயத்திற்குச் சென்று விட்டு வந்து தகவல் சொல்ல வேண்டும் ! "

"உத்தரவு மகாராஜா ! "

சில வினாடிகள் கழித்து அவர் முகப்பிற்குப் போனார். மீண்டும் உள்ளே வந்தார்.

" என்ன மங்களம் ! "

" மகாராஜாவைப் பார்த்துப் போக ஒரு சாஸ்திரிகள் வந்துள்ளார். உத்திரவு ! "

"அழைத்து வா " என்று சொல்லி பக்கத்தில் வைத்து இருந்து கறுப்புக் கண்ணாடியை அணிந்து கொண்டார். மங்களம் சாஸ்திரியுடன் வந்தார்.

"மகாராஜா ! நமஸ்காரம் !"

சாஸ்திரிகள் வணக்கம் சொன்னார் .

"நமஸ்காரம் !" அந்த சேரில் அமருங்கள் "

"மகாராஜா ! தங்களது அரண்மனை நவராத்திரி விஷேடத்திற்காக வந்தேன். விழா முடிந்தவுடன் இராமேஸ்வரம் தனுஷ்கோடி சென்று திரும்புவேன். மகாராஜா அவர்களது சாஸ்திரப் பயிற்சியையும் திவ்ய குணங்களையும் கேள்விப்பட்டேன் சமூகத்தைச் சந்தித்ததைப் பெரிய பாக்கியமாக நினைக்கிறேன்."

"தங்களது பூர்விகம், நாமதேயம் என்னவோ ?"

"எனக்கு சோழதேசம் திருவையாறு. பெயர் அனந்தராமன் சாஸ்திரிகள். ஸ்ரீமத் இராமாயண உபந்நியாசகன்".

"நேற்று முடிந்து போன நவராத்திரி விழாவில் இராமாயணப் பிரசங்கம் செய்திர்களா ?"

"ஆம் மகாராஜா ! மூன்று நாட்கள் அயோத்தி காண்டம் மட்டும் பிரசங்கம் செய்தேன் !"

"இராமாயணப் பிரசங்கிகள் பொதுவான பாலகண்டப் பகுதியை மட்டும் பிரசங்கத்திற்கு எடுத்துக் கொண்டு மிதிலையில் சீதையின் திருமணத்துடன் முடித்துவிடுவார்கள், தாங்களோ. . . "

"மகாராஜா சொல்வது சரிதான். நான் ஒரு புதுமையைச் செய்ய வேண்டும் என்பதற்காக அயோத்தியா காண்டத்தை எடுத்துக் கொள்கிறேன். அத்துடன் பகவான் மனித உருவில் இராமனாக அவதாரம் செய்ததன் நோக்கம் இந்தக் காண்டத்தில் தான் தொடங்குகின்றது."

அந்தக்கால முறைப்படி தசரதச் சக்கரவர்த்தியின் மூத்த புதல்வனாகிய இராமன், முடி சூட்டி மன்னனாக இந்த உலகை பரிபாலிப்பதற்கு பதில் காடு செல்ல வைப்பதற்கு மந்தரை கைகேயியிடம் சூழ்ச்சி செய்கின்றனர். இது பகவானது இராவணா சம்ஹாரம் நடப்பதற்கு ஏதுவான திருப்பம் அல்லவா ?"

"ஆமாம் ! கைகேயின் சூழ்ச்சிக்கு காரணமாக கம்பர் சொல்வது இராமன் இராவணவதத்திற்குப் போகச் செய்வதற்குத்தான் கைகேயியின் சிந்தை திரிந்தது என்று குறிப்பிடும் பொழுது, " அரக்கர் பாவமும் அல்லவை இயற்றிய அறமும் துரக்க நல் அருள் துறந்தனன் தூமொழி மடவாள்" என்ற பாட்டில் அரக்கரது பாவம் எனப் பாடியுள்ளார்".

"மாகாராஜா சொல்வது மெத்த சரி". அத்துடன் இந்த கைகேயி சூழ்வினைப்படலத்தில் மிகுந்த சௌகரியங்களும் சுபீட்சமும் நிறைந்த அயோத்தியை விட்டு ஸ்ரீ தேவியும் சென்றுவிட்டதால் அவளது தமக்கையான மூதேவி வந்துவிட்டது போன்று கைகேயி அலங்கோலமாகக் கிடந்தாள் என்று குறிப்பிடுவதில் இருந்தும் ஸ்ரீ இராமனது வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்படுகிறது என்பதையும் கம்பர் சூசகமாகச் சொல்கின்றார்."

"மகிழ்ச்சி நன்கு சொன்னீர்கள்."

தினகர் சாஸ்திரிகளைப் பாராட்டினார்.

"தன்யனானேன் மகாராஜா ! இத்தகைய சிறப்பான பகுதிகளை மக்களிடம் விளக்கி, இராமகாதையை நன்கு புரிய செய்வதற்காகவே அயோத்தியா காண்டத்தை எனது பிரசங்கத்திற்கு எடுத்துக் கொள்கிறேன்."

"நல்லது தங்களது இலக்கிய சேவை தொடரட்டும்."

"ஏதோ எங்களால் ஆன சிறிய சேவையை செய்து வருகிறோம். சேது பந்தனத்திற்கு அணில் உதவியது போல, மகாராஜா எனக்கு உத்திரவு தாருங்கள்."

"மங்களம் ! சாஸ்திரிகளுக்கு அரண்மனை மரியாதை அளித்து அனுப்பி வை !"

"உத்திரவு" என்று பக்கத்து அறைக்குள் சென்ற அந்தப் பணியாள் ஒரு தட்டில் வேஷ்டியும் அங்கவஸ்திரமும் வைத்து அதன் மேல் ஒரு நூறு ரூபாய் நோட்டும் காளாஞ்சியும் வைத்து எடுத்து வந்தார்.

"மகாராஜா ! இதோ தாம்பூலத்தட்டு"
பணியாள் மங்களம் பணிவாகச் சொன்னான்.
"சாஸ்திரிகள் வாங்கிக் கொள்ளுங்கள் !"

தினகர் சொன்னதும் சாஸ்திரிகள் தட்டில் இருந்தவைகளை எடுத்துக் கொண்டு,

"மகாராஜா ! மெத்த சந்தோஷம் போய் வருகிறேன். மங்களர்தி பவந்து !" என்று சொல்லி விடை பெற்றார்.

மாலை நேரம்,

இராமமந்திரத்தின் முகப்பில் தினகர் மெதுவாக பாதங்களை வைத்து உலாவிக் கொண்டு நின்றார். ஒவ்வொரு சுற்றுக்கும் எத்தனை தடவைகள் பாதங்களை வைத்து நடக்க வேண்டும் என்ற முடிவில் அவர் அங்கும் இங்குமாக நடந்து கொண்டிருந்தார்.

அப்பொழுது, ஜிப்பா, பைஜாமா, அணிந்து தலையில் மடக்குத் தொப்பியுமாக வந்து,

"மகாராஜா ! சலாம் !" என்று வணக்கம் சொன்னார்.

"யார் நீங்கள் ? என்ன விஷயம் ?"

"மகாராஜா ! பெரிய பள்ளிவாசல் டிரஸ்டி அனுப்பி வைத்தார்கள். இன்று முகரம் பத்தாவது நாள். எங்களது பள்ளி வாசலில் இருந்து சந்தனக் கூடு இரவு 7.00 மணி சுமாருக்கு லக்ஷ்மிபுரம் நோக்கி தங்கள் அரண்மனை வழியாக செல்ல இருக்கிறது என்ற விவரத்தை சமூகத்திடம் தெரிவிக்கச் சொன்னார்கள்."

"நல்லது வழக்கப்படி எங்களது அரண்மனை வாசலில் தக்க வரவேற்பு செய்வோம்"

"மகாராஜா வருகிறேன் !"

வந்தவர் செய்தியைச் சொல்லி விட்டு திருப்பிச் சென்றார்.

"மங்களம்"

பணியாள் வந்து நின்றார்.

"இன்று இரவு 7.00 மணி சுமாருக்கு சந்தனக்கூடு நமது அரண்மனை வழியாகச் செல்ல இருக்கிறது. வழக்கப்படி அப்பொழுது நாம் மரியாதை செய்ய வேண்டும். நமது அரண்மனை வாசலில் ஒரு நாற்காலியைக் கொண்டு போய் போடு. அதில் மூன்று மல்லிகை மாலைகள் வாங்கி வைக்கவும், சந்தனப் பேழை நிறைய சந்தனம் கரைத்து வைக்கவும். அத்துடன் சாம்பிராணி, ஒரு வீசை சர்க்கரையும் வைக்க வேண்டும். சரியாக எனக்கு ஏழு மணிக்குத் தகவல் சொல்லவும். அரண்மனை வாசலுக்குச் செல்ல வேண்டும்."

"சமூகம் உத்திரவு."

பணியாளர் பதில் சொன்னார். மீண்டும் அவர் தொடர்ந்து சொன்னார்.

"இப்பொழுது மணி ஐந்து. மகாராஜா தங்கள் அறைக்குத் திரும்பலாமா ?"

"தினகர் அவரது அறைக்குச் செல்ல அந்தப் பணியாள் உதவினார்.

முஸ்லிம்களது பஞ்சாங்கத்தின் படி அவர்களது முகரம் பத்தாவது நாள், துக்கதினம். நபிகள் நாயகம் அவர்களது பேரன் ஹீசைனையும் அவரது குடும்பத்தினர், பணியாட்கள் அனைவரையும் எஜீது என்ற கொடியவன் கர்பலா என்ற இடத்தில் தாக்கிப் படுகொலை செய்த நாள்.

அந்த சோக நிகழ்ச்சியைக் குறிக்கும் வகையில் இஸ்லாமிய மக்கள் சந்தனக் கூடு என்ற சப்பரம் போன்ற அமைப்பை ஊர்வலமாக எடுத்துச் சென்று லஷ்மிபுரத்தில் சந்தனக் கூட்டை பிரிந்து எடுத்து புலம்பிக் கொண்டு திரும்புவார்கள்.

போர்களத்திற்குச் சென்று படுகொலையான ஹீசைன் நினைவாக, யானை, குதிரைகள், முன்செல்ல, மக்கள் சூழ்ந்து வரும் இந்தச் சந்தனக்கூடு இராமமந்திரம் அரண்மனையைக் கடந்த செல்லும் பொழுது, தினகர் சந்தனக் கட்டை எடுத்து வரும் இஸ்லாமியப் பெருமக்க்ளை வரவேற்று, சந்தனக்கூட்டிற்கு மல்லிகை மாலைகள், அணிவித்து தாம்பூலம் சந்தனம் வழங்குவதும், இஸ்லாமிய மதக்குரு (ஆலிம்) தினகரது நீண்ட ஆயுளுக்கும் சுபிட்சமான வாழ்விற்கும் இறைவனிடம் கையேந்தி பிரார்த்தனை செய்து முடித்ததும், சிலம்ப வஸ்தாதுகளின் சந்தனக்கூடு ஆட்டத்தோடு, அங்கிருந்து செல்வது வழக்கம். சிலம்பு விளையாட்டுக்களும் சிறிது நேரம் நடக்கும். அவர்களுக்கு வேட்டி, துண்டுகளை தினகர் வழங்குவார்.

சேதுபதிகளின் சமரச நோக்கத்திற்கு எடுத்துக்காட்டாக அமையும் நிகழ்ச்சி இது.

ஆண்டுதோறும் நடைபெறம் இந்த அரண்மனை மரியாதையைத்தான் தினகர் தமது பணியாளுக்கு நினைவுறுத்தினார்.





# இறுதிநாள்களில்

இந்த ஆண்டு தொடங்கிய நான்கு மாதங்களில் தினகர் சேதுபதி எழுபத்து ஒரு ஆண்டுகளைக் கடந்த இளைஞராகக் காட்சியளித்தார். அவரது தலை முடியிலும் மீசையிலும் முதுமையின் முன்னறிவிப்பான நரை மட்டும் காட்சி தந்தது. அவரது ஆஜானு பாகுவான உடல், வாரணம் பொருதும் மார்பு வரைகள் போன்ற தோள்கள், இவைகளின் வல்லமையை பிரதிபலிக்கும் கம்பீரக்களையுடன் முகம் அமைதிகொலு வீற்றிருக்கும் இராமமந்திரம் மாளிகையில் அவரது பொழுது மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது. என்றாலும், அன்று உலகைப் பற்றிப் பிடித்து அலைக்கழிவு செய்து வந்த இரண்டாவது உலகப்போரின் பாதிப்பினால் எழுந்துள்ள பிரச்சனைகளும் அவரது வாழ்க்கையில் சிறு சிறு கீறல்கள் ஏற்படுத்தி வந்தன. உலக முழுவதும்

இந்தக் கொடிய போரின் தாக்கம் இருக்கும் பொழுது அது இராமமந்திரம் மாளிகையிலும் பிரதிபலித்ததிலும் வியப்பு இல்லை ! இந்தப் போரின் அங்கங்களான அவலங்கள் அன்றாட வாழ்க்கையின் இன்றியமையாத உணவுப் பொருட்கள், துணிமணிகள், உயிர்காக்கும் மருந்துகளின் தேவைகள் இமயமலை உச்சத்தை அடைந்தன. அரிசி, கோதுமை, மண்ணெண்ணை போன்ற பொருட்களை அரசினரது பங்கீட்டுக்கடைகளில் இருந்து பெறுவது, அரிய செயலாகிவிட்டது. ஆனால் கள்ளச்சந்தையில் எளிதாகக் கிடைக்கும் இந்தப் பொருட்களை நடுத்தர வர்க்கத்திலிருக்கும் ஏழை எளியவரும் கூடுதல் பணம் கொடுத்து வாங்கமுடியாமல் திகைத்தனர். வழியறியாத மக்கள் எத்தனை நாட்கள் பட்டினிக் கொடுமையைப் பொறுமையுடன் தாங்கிக்கொள்வது ? ஒரு சிலர் இராமமந்திரம் மாளிகை நோக்கிச் சென்றனர். அஞ்சேல் என்ற சொல்லும் அடையா நெடுங்கதவும் கொண்ட அந்த மாளிகை அவர்களது பசிப்பிணி தீர்க்கும் மருத்துவராக தினகர் சேதுபதி விளங்கினார். நாள்தோறும் அந்த மாளிகைக்கு வரும் ஏழை எளியவர்களது நம்பிக்கை வீண் போகவில்லை.

இரண்டு அப்பங்களையும், ஐந்து மீன்கேகளையும் வைத்து, தம்மை நாடி வந்த ஏராளமான மக்களுக்கு அமுது செய்து ஏக அனுப்பினார் என பைபிள் கூறுகிறதல்லவா!

ஆடல் அரசி மாதவியின் மகளான மணிமேகலை கன்னிப் பருவத்திலேயே பவுத்த பிக்குணியாக மாறி அமுத சுரபியைக் கையில் ஏந்தியவளாக பாரகம் முழுவதும் பசிப்பிணி அறுக எனப் பாடுபட்டதை ஐம்பெரும்

காப்பியமான மணிமேகலையில் காணப்படுகிறதல்லவா!

இப்படி எத்தனையோ வரயாற்றுச் சான்றுகள் ! ஓவாப்பசிப்பிணியை விரட்டியடிக்க !

ஏன் தினகர் சேதுபதியின் முந்தையோர் சேது நாட்டின் அதிபதிகளாக மட்டுமல்லாமல் கிழக்குக் கடற்கரையையொட்டிய சேதுமார்க்கத்தில் அறுபதுக்கும் மேற்பட்ட அன்ன சத்திரங்களை ஆங்காங்கு நிறுவி நலிந்தவர்களுக்கு பயணிகளுக்கும் பசிப்பிணி அகற்றிய அன்னதாதாக்களாகவும் அல்லவா வரலாற்றில் வாழ்கின்றனர்.

தினகரசேதுபதியின் இந்த பட்டினி அகற்றும் பணி தொடர்ந்தது. பழ மரத்தை நோக்கி பறந்துவரும் பறவைகளைப் போன்ற இந்த ஏழை எளிய மக்களது வாட்டத்தை கண்டு எரிச்சல் கொள்ளவில்லை. ஏமாற்றமடையவும் செய்யவில்லை.

ராஜா தினகர சேதுபதியின் பணி தொடர்ந்தது. ஏழை எளிய மக்கள் அங்கு வயிறார உண்டு சென்றனர். மகாராஜன் நீடுழி வாழ வேண்டும் என வாழ்த்துக்கூறிச் சென்றார்.

நூற்றாண்டுகள் காலமாக மறவர் சீமையின் மக்களது நலனைக் காத்த சேது மன்னர்களது கொற்றத்தையும் குடிப்பெருமையையும் காத்து பேணி நின்ற பண்பாளராக அவர் விளங்கினார்.

அல்லல்படும் மக்களுக்கு உணவும் பொருளும் வழங்கும் உத்தமராக விளங்கிய அவரது வாழ்க்கையில் ஆத்ம திருப்தி துலங்கியது.

என்றாலும், வாழ்க்கை என்பது எப்பொழுதும் கொந்தளித்து நுங்கும் நுரையுமாக வரும் கங்கையின் நதி பிரவாகமாக அமைந்து விளங்குவதில்லை. பெரும்பாலும் குறுமணல் கொழித்து குழிகளை நிறைத்து கரைகளைக் கூட தொட்டுச் செல்லமுடியாது. ஆற்றுப்படுகையின் குறுகிய வாய்க்களாக விளங்கும் வையைப் போன்று தான் அமைந்து விடுகிறது. பற்றாக்குறை, இந்த உண்மையை நன்கு அறிந்த தினகரசேதுபதி பொறுமையுடனும் அவசரமில்லாமலும் இந்தப் பணியைச் சமாளித்து வந்தார்.

வைகறையில் குளியலை முடித்து தியானத்திலும் பாராயாணத்திலும் நீண்ட நேரம் காலைப் பொழுதைக் கழிப்பதை அவர் வழக்கமாகக் கொண்டிருந்தார். அந்தச் சமயங்களில் அவரது ஒளி இழந்த கண்கள் புத்தொளி பெற்றன. உடல் முழுவதும் புதிய தெம்பு முகத்தில் கோபதாபங்க்ளை இதயம் ஒருவித இன்பமயமான லயிப்பு சித்தர்களும் பெற்ற தெய்வீக அனுபவம். மணி வாசகரது சிவபுராணத்தைச் சொல்லி முடித்து மீண்டும்.

"நமச்சிவாய வாழ்க ! நாதந்தாள் வாழ்க.
தென்னாடுடைய சிவனே போற்றி
என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி ! !"

என்ற தொடர்களைச் சொல்லிமுடித்ததும் அவரது காலை இறை வழிவாடு நிறைவு பெறும். ஆனால் வணக்க

வழிபாட்டில் அவருக்கு கிடைக்கும் ஆன்மீக அமைதி அவரிடம் நாள் முழுவதும் நிறைந்து இருக்கும். இதனால் அவரது நடவடிக்கைகளில் ஒரு நிறைவு, அமைதி ஆகியவை நிறைந்து பொலிந்து காணப்படும்.

பணியாட்களுக்கு வேலை கொடுத்தாலும் அன்பு மகள் வசந்தத்தை அழைத்துப் பேசினாலும், அவரது பேச்சில் மென்மையும் கனிவும் மிகுந்து இருக்கும். பொதுவாக இரவும் பகலும் இராமமந்திரம் மாளிகை ஒரு ஆஸ்ரமம் போல அமைதியின் மறுவடிவாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. பறவைகளின் பரவசகிதம், மயிலின் அகவல், குயிலின் கூவல், செம்பொத்தின் விட்டிசைக்கும் ஒலி, கிளி, காகம், சிட்டிகளின் சேர்ந்திசை - ஜலதரங்கம் போல கூட்டு இசையாக ஒலித்துக் கொண்டிருக்கும் இந்தச் சூழல் மிகவும் விரும்பிய தினகரது உள்ளத்தில் ஒரு வித இனிமையை நிறைத்தது.

சில சமயங்களில், இவைகளிலும் நிறைவு கொள்ளாத அவரது நெஞ்சம், மனித உணர்வுகளை நெகிழவைக்கும் இசையைத் நாடி ஓடும் அவளது அன்பு மகள் வசந்தம் தந்தையின் ஆசையை நிறைவேற்ற அவளது வயலினை அல்லது வீணையை எடுத்து வந்து தந்தையின் முன் அமர்ந்து இசைச்சுருதியை மீட்டுவாள். அந்தப் பிஞ்சு விரல்களில் மந்திர சக்தியல்லவா பொருந்தி இருந்தன. சிறுமி வசந்தத்தின் இடது கை விரல்கள் மென்மையாக வீணையின் தந்திகளை மென்மையாகத் தொட்டுத்தடவியதுடன் மோடி வித்தையால் கட்டுண்டது போல தந்திகள் நாதம் எழுப்பின. அல்ல கிள்ளைகளின்

அன்பு மொழி போல செவிகளில் நுழைந்து சிந்தையில் கலந்து ஒரு விந்தையான இன்ப உணர்வுகளைச் சங்கமிக்கச் செய்தன. மகிழ்ச்சி பொங்கி வழிந்தன. இசை மேதையான தினகர் தேனையும் தெவிட்டாத அமுதத்தையும் மாந்தி மகிழ்ந்தது போல "சபாஷ்" என்ற சொல்லி தனது பெரிய தலையை மெதுவாக அசைத்து அன்பு மகளின் அரிய தேர்ச்சிக்குப் பாராட்டு தெரிவிப்பார்.

"வேறு ராகம் வாசிக்கவா ?" என்று மகள் கேட்டால்.

"இல்லையம்மா ? இதுவே திவ்யமாக இருக்கிறது. அப்பழுக்கில்லாத இந்த வீணை இசையைத்தவறாமல் அப்பியாசம் செய்துவா ! இன்னும் சிறப்பாக வாசிக்க முடியும் !"

"நல்லது டாடி"

அன்று வைகறையில் குளியல் அறையில் இருந்து வந்த தினகர் உறாலில் சோபாவில் அமர்ந்து துண்டினால் அவரது தலையில் உள்ள ஈரத்தைத் துடைத்துக் கொண்டிருந்தார். அவரது தலைக்குமேல் தொங்கிக்கொண்டிருந்த மின்காற்றறாடியைப் பணியாள் சுழலச்செய்தார். மெல்லிய காற்று அந்தக்கூடம் முழுவதும் சூழ்ந்து சுற்றிச்சுற்றி வந்தது. ஆனால் அவரது உடலிலும் முகத்திலும் வியர்வை அரும்பி வழிந்தது. அவருக்கே ஆச்சரியமாக இருந்தது.

"என்ன இன்று இப்படி வியர்த்துக் கொட்டுகிறது! எங்கே நாச்சியார்?"

“இதோ வந்து கொண்டிருக்கிறேன். மகாராஜா! டீ கொண்டுவந்து இருக்கிறேன். இந்த டீயை பருகுங்கள் என்று வெள்ளி கோப்பையில் இருந்த டீயையும் தட்டையும் அவரிடம் மெதுவாகக் கொடுத்தார்.

“நான் டீ குடிக்கிறேன். நீங்கள் போய் இன்னொரு டவல் கொண்டு வாருங்கள்!”

தினகர் சொன்னார் நாச்சியார் விரைவாகச் சென்று சலவைத்துண்டு ஒன்றை எடுத்து வந்து

“மகாராஜா! இதோ துண்டு! ” என்று அவரிடம் கொடுத்தார்.

பணியாளும் நாச்சியாரும் தினகரது மேல் அங்கியை அகற்றிவிட்டு வியர்வையில் நனைத்து கொண்டிருந்த உடலை துண்டுகொண்டு நன்கு துடைத்தனர். வியர்வை தடை படவில்லை.

ஹாலில் இருந்த பெரிய கடிகாரம் டிங் . . . டங் என மணியடித்து ஓய்ந்தது. “அதற்குள் ஏழு மணியாகிவிட்டதா? எங்கே வசந்தம்? ”

“இதோ இங்குதான் இருக்கிறேன் டாடி ! ” பதில் சொன்ன சிறுமி தினகர் அருகில் சென்று அமர்ந்தாள்.

“நாச்சியார் ! ரேடியோ சுவிட்சைப் போடுங்கள்”.

நாச்சியார் சென்று ரேடியோ கிராமில் ரேடியோக்கான கவிட்சை முடுக்கி விட்டார். ஒரு ஒலி அடுத்து வீணை ஓசை ஒலித்தது.

மிகுந்த ஆயாசத்தில் இருந்த தினகர் இசையை ரசித்ததாகத் தெரியவில்லை.

"இறைவா! ... இறைவா!"

வேறு எந்த சொல்லும் வெளிவரவில்லை. மூடிய கண் இமைகளில் அசைவு இல்லை. அவரது அழகிய உதடுகளில் இருந்து உதிர்ந்த சொற்களும் நின்றுவிட்டன.





# புகழுடம்பில்

அந்த காலை வேளையில், இராமநாதபுரம் அரண்மனை வளாகத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த அனைத்து பணியாளர்களும் தினகர் அமர்ந்து இருந்த முகப்பு அறையில் கூடி விட்டனர். அவர்கள் அனைவரது முகங்களிலும் துக்கம் தளும்பி வழிந்தது.

வைத்தியரை அழைக்கச் சென்ற பணியாள் ஒரு நடுத்தர வயதை எட்டிய ஒருவருடன் திரும்பி வந்தார். தலையில் ரோஜா மலர் வண்ணத்துணியில் முண்டாசு அணிந்து அவரை மக்கள் சம்பாக் காதர் என்று அழைப்பர். இராமநாதபுரத்தில் மிகவும் பிரபலமான வைத்தியர். நாடி பார்ப்பதிலும், நோயின் தன்மை என்ன என்பதையும் அதைத்தீர்க்கும் சரியான மருந்துகளைக் கொடுத்து நோயைக் குணப்படுத்தும் மிகத்

திறமையான மருத்துவர் எனப் பெயர் பெற்று இருந்தவர். அவரது வீடு, இராமநாதபுரம் அரண்மனைக்கு எதிரில் இருந்த வெற்றிலைக்காரர்கள் குடியிருப்பில் இருந்ததால், அடிக்கடி தினகரிடம் வந்து அளவளாவிச் செல்பவர். அன்று காலையில் பணியாளர் போய் அழைத்ததும் தனது மருந்துப் பையை மடியில் வைத்து பிணைத்தவாறு விரைவாக அங்கு வந்தார். தினகர் அமர்ந்து இருந்த சோபாவிற்கு எதிரே நாற்காலியில் அமர்ந்தவாறு, தினகரது வலது கை மணிக்கட்டு நாடியில் தமது விரல்களை வைத்து நாடியின் இயக்கத்தை ஆய்வு செய்தார். அடுத்து அவரது கண் இமைகளை நீக்கி விழிகளைப் பார்த்தார்.

சில நொடிகளில் அவருக்கு தினகரது நிலை புரிந்துவிட்டது. தினகரது அருகில் நின்ற கொண்டிருந்த குஞ்சரம் நாச்சியாரை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, அங்கிருந்து எழுந்து வெளியே வந்தார். குஞ்சரம் நாச்சியாரும் வைத்தியர் பின்னால் முகப்பிற்கு வந்தார்.

"நாச்சியார் ! கருணையுள்ள இறைவன் இதுவரை மகாராஜாவிற்கு நல்ல ஆயுளையும் செல்வாக்கையும் கொடுத்து, மகாராஜாவிற்கு கீர்த்தியும், புகழும் நிலைபெறச் செய்தான். இவ்வளவு சிறந்த உத்தமமான நமது மகாராஜாவை இறைவன் தம்மிடம் அழைத்துக் கொள்ளும் நேரம் வந்துவிட்டது. நாடிகள் ஒன்றன் பின் ஒன்றாக நின்று கொண்டு வருகின்றன. இன்னும் ஐந்து நிமிடங்களில் அவரது ஐம்புலன்களும் அடங்கிவிடும். ஆதலால் மனத்தைத் தேற்றிக் கொள்ளுங்கள். ஆக வேண்டிய காரியங்களைப் பாருங்கள்" என்று நாச்சியாரிடம் தெரிவித்து விட்டுப் புறப்பட்டார்.

கூடத்திற்கு சென்ற நாச்சியார், கம்பீரமாக சோபாவில் சாய்ந்து இருக்கும் தினகரை ஒருமுறைப் பார்த்தார் துக்கமும் வேதனையும் மேலிட "மகாராஜா" என்ற தீனக் குரலில் கத்தினார். அப்படியே தாங்க முடியாத வேதனையினால் தரையில் நழுவியவாறு அமர்ந்தார். அதற்கு மேல் அவரால் ஒன்றும் பேசமுடியவில்லை.

அவ்வளவுதான் அங்கிருந்தவர்களுக்குப் புரிந்துவிட்டது. அவரது அருமை மகள் வசந்தம் "டாடி"! "டாடி"! எனக் கதறினார். பக்கத்தில் கண்ணீருடன் நின்று கொண்டிருந்த அவ்ரது செவிலியர் வசந்தத்தை ஆறுதலாக அணைத்துக் கொண்டு ஆறுதல் கூறினர்.

கூடியிருந்த அனைவரது கண்களில் இருந்த கண்ணீர் கொட்டியது. ஓரிருவர் ஒப்பாரி வைத்து அழுதனர்.

விம்மல், அழுகுரல் . . . . . . ஒப்பாரி

அமைதியும் அழுகும் தவழும் இராம மந்திரம் அவலத்தின் கொடுமுடியாகக் காட்சியளித்தன.

இராம மந்திரத்திற்கு எதிர் வரிசையில் இருந்த முஸ்லீம் மக்களும் கூக்குரல் கேட்டு அங்கு வந்து கூடிவிட்டனர். யாரும் உறவினரான ஆண்கள் யாரும் இல்லாததால் பணியாளர்கள், தினகரது சடலத்தை சோபாவில் அகற்றி நாற்காலியில் படுக்கை நிலையில் வைத்தனர். அவரது தலைப்பாகையை எடுத்துவிட்டு

அவரது உடலை காஷ்மீர் சால்வையினால் போர்த்தினர்.

கண் இமைகள் மூடி இருந்தாலும், கம்பீரமான தோற்றம், உயர்ந்து உறங்கிக் கொண்டிருப்பது போன்ற பிரமை பார்ப்பவர்களுக்கு

அவர்தான் மீளாத உறக்கத்தில், உயிர்ப்பு இல்லாத மரணத்தில் மூழ்கிவிட்டாரே. சேதுபதி மன்னரது குடும்பத்தில் யாரும் வாழாத எழுபத்து இரண்டு ஆண்டு காலம் வாழ்ந்த அவரது வாழ்க்கை முடிந்து சில நிமிடங்கள் ஆகிவிட்டன.

ஆம், தினகர சேதுபதி மறைந்து விட்டார்.

சிறப்புமிக்க செந்தமிழ்ச் சேதுபதிகளது குடும்பத்தில் அரசிளங்குமரனாகப் பிறந்து, வளர்ந்து, ஆன்ம நேயத்தையும் அரிய புலமையும் பெற்ற பல்கலைச் செல்வராகவும், பரோபகாரியாகவும் வாழ்ந்து, இயேசு நாதரது இரட்சண்ய ஜீவியத்தில் இணைந்த கிறித்தவராக மரித்துவிட்டார்.

அவர் மரணமுற்ற அந்த நாள் ஆயிரத்து தொள்ளாயிரத்து நாற்பத்து இரண்டாம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பதினொன்றாம் நாள்.

இந்த மண்ணில் மனிதப்பிறவி பெற்ற மனிதர் அனைவரும் மரணம் என்ற ஆலகால விஷம் போன்ற கொடிய பானத்தைப் பருகித்தான் ஆக வேண்டும் என்ற

நியதியை இறைவன் ஏற்படுத்தி இருக்கிறான். இந்த இறையாண்மைக்கு அனைத்து மனிதரும் கட்டுப்பட்டு காலத்தினால் கவர்ந்து செல்லப்படுகின்றனர். அவர்களது பூத உடல்கள் மண்ணுக்கு தீனியாகி விடுகின்றன. இன்னும் சிலரது உடல்கள் நெருப்புக்கு இரையாகி சாம்பலாகி விடுகின்றன.

ஆனால் விரல் விட்டு எண்ணக்கூடிய ஒருசிலரது பூத உடல்கள் புதைந்து, நமது பார்வையில் இருந்து மறைந்தாலும், மறைந்த அந்த மகத்தான மனிதர்கள், மகான்களாக, மக்களுக்காக மக்கள் நலிவு தீர்க்க பாடுபட்ட தொண்டராக மக்களுக்கு நல்வாழ்வு சேர்க்க நாளும் உழைத்த உத்தமமகான்களாக, உபகாரிகளாக மக்களில் என்றென்றும் நினைவு கொள்ளும் புகழ் உடலில் வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர்.

அந்தப்பட்டியலில்தான் தினகர சேதுபதியும் இடம் பெற்றுள்ளார்.

அவரது அறக்கொடைகளை, ஆன்மிக உள்ளத்தை நன்றியுணர்வோடு எண்ணும் வரை, அவரது புலமையையும், இலக்கியப் படைப்புகளையும் நடுநிலையோடு சிந்தித்து சுவைக்கும் வரை, உன்னத ஓவிய, இசைத்திறமையையும் அறிந்து மகிழும் வரை, அவரது ஸ்தூல சரீரத்தைவிட அளவிலும், பெருமையிலும் பன்மடங்கு உயர்ந்து சிறந்த புகழ் உடம்பு இந்த உலகில் வாழ்ந்து கொண்டே இருக்கும்.





# மேலும் சில வரிகள்

செம்மையான ஆட்சிக்கும் சிறந்த சமுதாயபணிகளுக்கும் உரியவர்களாக மட்டுமே சேதுபதி மன்னர்களை இதுவரை வரலாறு விவரித்துள்ளது. இவர்களது மரபினரும், ஆட்சிக் கட்டிலில் அமர்ந்து, சேதுபதி பட்டம் சூட்டிய ஆட்சியாளர்களைப் போல வீரமறவர்களாக, ஈரநெஞ்சினராக, தீரச் செயலினராக, இணையற்ற கலைஞராக இருந்துள்ளனர் என்பதற்கு இந்த தினகர சேதுபதியின் வாழ்க்கை விரித்த புத்தகமாகக் காட்சியளிக்கிறது. ஆட்சியாளர்களாக இல்லாத ஒரே காரணத்தினால் இத்தகைய நன்மக்களை அதே வரலாறு இனங்காட்டத் தவறி உள்ளது.

கொடிவழியையும், குலப்பெருமையை காத்து நின்றவர் தினகர். சிறந்த கலைச்செல்வர். ஆங்கில மொழிப்புலமையில் தமது

தலைவனரான பாஸ்கர சேதுபதி மன்னரையும் விஞ்சி நின்றவர். அருமையான இசைக்கலைஞர். வீரம் செறிந்த பொழுது போக்குகளான குதிரை ஏற்றத்திலும், துப்பாக்கியை இயக்குவதிலும் மிகுந்த திறமை பெற்றுத் திகழ்ந்தவர்.

இயற்கையாக அவர் பெற்று இருந்த புலமையையும், ஆய்வுத்திறனையும் அவைகளுக்கெல்லாம் மேலாக அவைகளை சாதாரண மக்களும் அறிந்துணர்ந்து பயனடைய வேண்டும் என்ற ஆசைப்பெருக்கையும், அவரது இலக்கியப் படைப்புகள் பறைசாற்றுவதாக உள்ளன. "திறமான புலமையெனில் அதனை வெளிநாட்டார் வணக்கம் செய்தல் வேண்டும்" என்ற மகா கவி பாரதியின் மணிவாக்கிற்கிணங்க தினகரது தேர்ந்த முதிர்ச்சியின் வடிவாக அமைந்தன. அவரது இலக்கியப் படைப்புகள். அவரது வாழ்க்கையின் கடைசிப் பத்தாண்டுகளில் அவர் கண்ணொளி இழந்து அவதிப்பட்ட நிலையிலும் இலக்கியப்பணி தொடர்ந்து வந்து இருப்பதைக் காணும் பொழுது அவரது இலக்கியத்தில் கொண்டுள்ள வேட்கை நம்மையெல்லாம் வியக்க வைக்கிறது.

இதனைப் போன்றே வழிவழியாக வந்தடைந்த இசைப்புலமையையும், பியானோ, வயலின் இசைக்கருவிகளை இசைப்பதிலும் பெற்று இருந்த அற்புதத் தேர்ச்சியை தமது அருமை மகளான செல்வி. வசந்தவேணியும் பெற்றுத்திகழ வேண்டும் என்று எண்ணி அவருக்கு பயிற்சி அளித்து, முறைப்படுத்தி, நிறைவு செய்து வைத்தது, அவருக்கு இசைத்துறையில் இருந்த

ஈடுபாட்டை அறுதியிட்டுக் காட்டுவதாக உள்ளது.

இவ்விதம் பன்முகத் திறமையாளராக, பல்கலைச் செல்வராக, பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்த பெருமகனாராக வரலாற்றில் விளங்கும் இவரது விசுவரூபத்தை இந்த சிறு நூலில் விவரிக்க முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது. ஆதலால் இவரை **திறமையின் திருஉருவமாக** மட்டுமே இந்த நூலில் சித்திரித்துக் காட்ட முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இந்தப் பெருமகனாரைப் பற்றிய செய்திகளையும், ஆவணங்களையும், சேகரிக்க முடியாத குறுகிய கால எல்லையில் கிடைத்துள்ள ஆவணங்களை கொண்டு இந்த **மும்மணிகளது விழாவில்** வெளியீடாக இந்த நூல் வெளியிடப்படுகிறது.

காலம் கனிந்து, அவரது இலக்கிய படைப்புகளும், ஓவியங்களும் மற்றும் பிற ஆவணங்களும் கிடைக்கப்பெற்றால் திருவருள் துணை கொண்டு மற்றுமொரு விரிவான நூலும் வெளியிடப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



## தினகர சேதுபதி அவர்களது வாழ்க்கையின் சிறப்பு நிகழ்வுகள்

1. மன்னர் துரை ராஜா முத்துராமலிங்க சேதுபதியின் இரண்டாவது மகனாக பிறந்த தேதி 26. 04. 1871.

2. ஆங்கில துரைத் தனத்தாரின் மேற்பார்வையில் கல்வி பயில சகோதரர் பாஸ்கர சேதுபக்தியுடன் சென்னை சென்றது கி.பி. 1875.

3. சென்னை அரசு கலை மற்றும் கைத்தொழில் கல்லூரியில் பயின்று ஓவிய வல்லுநராக பட்டயம் பெற்று இராமநாதபுரம் திரும்பியது கி.பி. 1888.

4. தமையனார் மீது பாகப்பிரிவினை வழக்கு தொடர்ந்து பின்னர் சமரசம் செய்து கொண்டது கி.பி 1893.

5. முதுகுளத்தூர் வட்டம், கருமல் கிராமம் சேது முத்து நாச்சியாரை திருமணம் செய்து கொண்டு லட்சுமி விலாசம் அரண்மனையில் இல்லறம் தொடங்கியது · கி.பி. 1895.

6. தனியாக அரண்மனை அமைக்க கால் கோளிட்டது. கி.பி. 1896.

7. சிக்காகோ அனைத்து சமயப் பேரவையில் கலந்து கொண்டு தாயகம் திரும்பிய வழியில், இராமநாதபுரத்திற்கு வருகை தந்த சுவாமி விவேகாநந்தருக்கு இராமநாதபுரம் மக்கள் சார்பில் வரவேற்பு இதழ் வாசித்துக் கொடுத்து சங்கர விலாசத்தின் வரவேற்றது 25.01.1897.

8. இராமமந்திரம் என்று பெயரிட்டு புதிய மாளிகைக்கு குடி புகுந்தது. கி.பி. 189[illegible]

9. தமையானர் பாஸ்கர சேதுபதி மறைவு 27.12.190[illegible]

10. பெரிய தந்தை பொன்னுச்சாமித் தேவரது மகன் (ஒன்று விட்ட சகோதரர்) வள்ளல் பாண்டித்துரை மறைவு 02.12.1911.

11. உடன் பிறந்த தங்கை பானுமதி நாச்சியார் மறைவு கி.பி.1919.

12. இராமநாதபுரம் சமஸ்தான கௌரவ திவானாக பதவி ஏற்றது. கி.பி.1921.

13. இராமநாதபுரம் யுனியன் போர்டு தலைவர் பணி ஏற்றது. கி.பி.1922.

14. சென்னை கவர்னர் கோஷன்பிரபுவின் இராமநாதபுரம் வருகையின் பொழுது அவருக்கு ஏற்பாடு செய்யப்பட்ட வரவேற்பு விழாவில் தமது ஆங்கில கவிதை நூலை கவர்னருக்கு அன்பளிப்பாக வழங்கிப் பாராட்டுப் பெற்றது 23.07.1926.

15. இராமநாதபுரம் மன்னர் மூன்றாம் முத்துராமலிங்க சேதுபதி மறைவு 04. 08. 1929.

16. தமது இரு கண்களின் பார்வையை ஒன்றன்பின் ஒன்றாக இழந்தது கி.பி. 1932.

17. மனைவி சேதுமுத்து நாச்சியார் காலமானது கி.பி. 1939.

18. தினகர் அஸ்தமனம் 11. 08. 1942.






இளஞ்சூரியர்களான பாஸ்கர சேதுபதியையும்
திவாகர சேதுபதியையும் ஈந்துவந்த
மன்னர் முத்துராமலிங்க சேதுபதி
*(கி.பி. 1841 - 1873)*



ஆங்கில அரசின் குதிரைப்படை அணியின்
கௌரவ தலைவராக நியமனம் பெற்ற
ராஜா தினகர் பகதூர்
சீருடையில்
(கி.பி. 1896)



தமையனார் மன்னர் பாஸ்கர சேதுபதியுடன் தம்பி
தினகர சேதுபதி



இராமநாதபுரம் நகர் யூனியன் போர்டு சேர்மென்

ராஜா தினகர்

(கி.பி. 1922)



திணகரது வாழ்வின் வசந்தமாக வந்த அன்பு மகள்

வசந்தவேணி

(கி.பி. 1930)



கலைவாணி போன்ற ஒப்பனையில்
செல்வி. வசந்தவேணி
(கி.பி. 1939)

பின்னிணைப்பு -I

# இந்துமத சூட்சுமம்

எம். தினகர்

| | |
|---|---|
| ஏறுமயிலேறி விளையாடுமுக | மொன்றே |
| ஈசனுடன்ஞானமொழி பேசுமுக | மொன்றே |
| கூறுமடியார்கள் வினைதீர்த்தமுக | மொன்றே |
| குன்றுருவவேல்வாங்கி நின்றமுக | மொன்றே |
| மாறுபடாசூரரை வதைத்தமுக | மொன்றே |
| வள்ளியைமணம்புணர வந்தமுக | மொன்றே |
| ஆறுமுகமான பொருணீயருள | வேண்டும் |
| ஆதியருணாசலமமர்ந்த | பெருமாளே. |

என்று குமாரக்கடவுளைக் பற்றிச் சொல்லும் மேற்கண்ட கவி இப்பிரபந்தத்தின் முதற் பத்தியில் அமைக்கப்பட்டிருக்கிறது.

இக் கவியானது அகஸ்திய மஹா முனிவரால் இயற்றப் பட்டதே தவிர ஸ்ரீ அருணகிரிநாதரால் இயற்றப்பட்டதாகக் கொள்வதற்கு எவ்விதக் காரணங்களுமில்லை யென்பது பின்வரும் உதாரணங்களால் நன்கு விளங்கும்.

"வாக்கிற்கருணகிரி" யென்று வழங்குதற்போல், புகழ் பரவும் அருணகிரியாரின் வாக்கு ஒப்பற்றதே. ஆனால் அருணகிரிநாதரின் வாக்கு வன்மை கொண்ட பாடல்களையும், மேற்கூறிய "ஏறுமயிலேறி விளையாடுமென்ற" கவியையும், ஒப்பிட்டுப் பார்த்தால் கொஞ்சமேனும் பொருந்தத்தக்கதாக இல்லை. மேலும் இதற்கும், அதற்கும், எந்தவிதக் காரணங்களாலும் சம்பந்தமிருப்பதாகக் கருதவும் முடியவில்லை. இவை

இரண்டின் தாரதம்மியத்தை ஆராய்ந்து பார்த்தால் இதனுண்மை புலனாகுமென்பதற்கு ஐயமில்லை.

குமாரக்கடவுளிடம் தாம் கொண்ட பக்தியை அருணகிரியார் தம்முடைய அரும் பெரும் வாக்கால் எக்காலமும் நிலைத்து நிற்கக் காட்டினார். கல்வித்திறமையுற்ற பண்டிதர்கள் சிலருக்கு மட்டுமே அருணகிரியார் வாக்கின் பொருள் தெற்றென விளங்கும். ஆனால் "ஏறுமயிலேறி" என்ற கவியின் வாக்கே அத்தன்மை வாய்ந்ததல்ல.

இவ்வாக்கின் அமைப்பு சர்வசுலபமாய்த் தமிழ் மக்கள் எல்லோரும் அறியக்கூடிய வாக்கேயாம். இவ்வாக்கின் சொற்கள் தமிழ்ப் பாஷையின் அதாவது (குழந்தைப் பருவத்தை) குறிக்கின்றன.

ஆதலால் அகஸ்திய மஹா முனிவர் தமிழ்ப் பாஷையின் உற்பத்திக்கே காரணமாய்க் கொள்ளும் கருத்துக்கிணங்க "ஏறுமயிலேறி" என்ற கவி மிகவும் புராதனத்தைக் குறிக்குந் தன்மை வாய்ந்ததாயிருக்கிறது. ஆனபடியால் அகஸ்தியரே இக்கவியை இயற்றியதாகக் கொள்வது நியாயமே.

குமாரக்கடவுளின் மகிமை தென்னாட்டிற்கு பரவக் காரணபுருடராயிருந்தவர் அகஸ்திய முனிவரேயாவர். அத்துடன் ஜோதிட சாஸ்திரத்தை தமிழ்ப் பாஷையில் தாமியற்றிய (குமாரசுவாமியம்) என்ற நூலில் விளங்கச்செய்தார்.

ஆறுமுகக் கடவுளை, ஆறு முகங்களுக்கு கடவுளாய் நினைத்து அருணகிரியார் பாடியிருக்கிறார். ஆனால் அகஸ்தியரின் கவியாகச் சொல்லும்

"ஏறுமயிலேறி விளையாடுமென்ற" கவியில் ஆறு முகங்களும் ஆறு கிருத்தியங்களைக் குறிக்குஞ் சின்னங்களாகத்துலக்கப்பட்டுள்ளன. அதாவது :- இவ்விதத்தினால் மறைபொருளான தத்துவத்தை, அல்லது உண்மையை, சொரூபமாய் வெளிப்படக் காட்டும் உபாயமென்று கருதவேண்டியது. இவ்விதமே சிவனின் சடாமகுடத்தில் கெங்கையை ஒரு ஸ்திரீயாகச் சொரூபித்துக் காட்டுவதானது கடவுளினது காருண்யத்தைக் குறிக்கும் அடையாளமாம்.

அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழார்வலர்
புன்கணீர் பூசறரும்.

என்ற திருவள்ளுவனாரின் வாக்கின்படி இயற்கையான கண்ணீர் ஜலமானது, அன்பினது அடையாளமாகிறது. அன்பினாலுண்டாகும் காருண்யத்திற்கு அடையாளமாக, சிறப்பும், அளவில்லாத் தன்மையுமுள்ள கெங்கா ஜலத்தைக் கடவுளின் முடியின் மீது வைத்தது உபாயமே.

கடவுளின் காருண்யமான தத்துவத்தை, அல்லது உண்மையை, மறைபொருளாய் வைத்துக் கெங்கையாகக் காட்டினதற்கு இது காரணமே. இக்கவியின் விசேஷமென்ன வென்றால் ஆறு முகங்களும், ஆறு கிருத்தியங்களைக் குறிக்கும் சின்னங்களென்று சொன்ன பின் அதன் உட்பொருளை "நீயருள வேண்டும்" என்று ஆதிஅருணாசலத்தின் கண்ணேயமர்ந்த பெருமானை நோக்கிச் சொன்னது தான் இதிலடங்கிய அருமைப் பொருள். "பொருள்" எனும் பதத்துக்கு அதன் அர்த்தத்

தாலாவது, அல்லது ஸ்தூலத்தாலாவது, நமது மனதை உணரச் செய்யாவிடில் அது பொருளாகமாட்டாது.

மயிலை நேர்முகமாகப் பார்த்த பொழுது, மயிலென்ற பதத்தின் அர்த்தம் எந்தப் பொருளைக் குறிக்கிறதென்று எல்லோருடைய மனதுக்கும் மிக எளிதாய்த் தோன்றுதல் போல, இங்கே "பொருள்" என்ற வார்த்தையானது, சொரூபத்தைக்குறிக்கும் அபிப்பிராயத்தை மிகச்சுலபமாய் உணர்த்துகிறது.

மேலும் ஓர் கிருத்தியத்தைச் செய்யவேணுமாயின் கரசரணாதிகளுள்ள சரீரம் அவசியமிருக்க வேண்டும். ஆதலால் இக்கவியில் சொன்ன ஆறு கிருத்தியங்களையும் நடத்துவதற்கேதுவான சரீரத்தில் குமாரக்கடவுள் அவதாரம் செய்யவேண்டியதன் அவசியமே பொருளென்ற வார்த்தையால் குறிக்கப் பட்டிருக்கிறது. இந்தக் கருத்தையும் சிலர் ஆஷேபிக்கலாம். அதாவது அந்தர்யாமியாயிருக்கும் கடவுள் சிருஷ்டி, திதி, சம்ஹாரம், என்ற மூன்று கிருத்தியங்களையும் சரீரம் எடுத்துத் தானா நடத்திவருகிறார் ? என்று கூறலாம். இக்கவியை சற்று நோக்குங்கால், இதன் முதல் வாக்கியத்தில் சொல்லியிருக்கும் கிருத்தியமானது விளையாடும் என்ற வார்த்தையினால் பிறப்பையும், குழந்தைப் பிராயத்தையும், குறிக்கிறது. இக்கர்மவுலகில் தான் பிறப்பும் இறப்பும், குழந்தைப்பிராயமும் யௌவனமும் முதிர்ச்சியும் ஏற்பட்டுள்ளன. குமாரக்கடவுள் இப்பூமியின் கண் அவதரித்த ரெனமுன் சொன்ன வாக்கியத்தின் கருத்துக்கிணங்க

பூமிகெர்ப்ப சம்பூதம் வித்யுத்தேஜசமப்ரபம்
குமாரம்சக்தீ ஹஸ்தஞ்சமங்களம் ப்ரணமாம்யஹம்.

என்று சமஸ்கிருத ஸ்லோகமானது, சுப்பிரமணியக் கடவுளைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது பூமியின் கெற்பத்தி லுண்டானவரும், மின்னலுக்குச் சமானமான காந்தியையுடைய வரும், குமாரனென்று சொல்லப்பட்ட கடவுளாயும், சக்திமயமான வேலை கையில் தரித்தவராயுமுள்ள, மங்களமென்று சொல்லப்பட்ட மூர்த்தியை நான் தியானிக்கிறேன், என்பது இதன் பொருள்.

இச்சமஸ்கிருத ஸ்லோகத்தின் முதல் வசனத்தில் பூமியின் கெர்ப்பத்திலிருந்து உற்பத்தியானவரென்று கூறப்பட்டுள்ளது. பூமியின் கெற்பமானது சிருஷ்டியில் உத்கிருஷ்டமான மனித ஜாதியில் கன்னிகையிடமிருக்கிறது. ஆகையால் கன்னிகையின் கெற்பத்தில் குமாரக்கடவுள் குழந்தைவடிவமாக அவதாரம் செய்தாரென்பதும், அதையே முதற் கிருத்தியமாகச் செய்தாரென்பதும், இக்கவியின் முதல் வாக்கியத்தின் பொருள்.

இந்த உண்மையை மறைபொருளாய் வைத்து புராணீகர்கள் குமாரக்கடவுளின் பிறப்பைப் பற்றிப் பலவிதமாய் சொன்னதில் இப்பூமியின் கண் கெங்கையில் உற்பத்தியானாரென்று சொல்வதுமொன்று, இதற்கொப்ப "காங்கேயன்" என்ற பெயரும் குமாரக் கடவுளுக்கு வழங்கி வருகிறது.

மேலும் ஆறுமுகமென்று சொல்லியிருக்கிறதல்லவா? ஆறு என்ற தொகையை குறிப்பிட்டுச் சொல்லக் காரண மென்ன? ஏன் ஐந்து அல்லது ஏழு முகங்களாகயிருக்கக் கூடாது ? ஏனென்றால் ஆறாவது தொகை சிருஷ்டி என்ற தொழிலைக் குறிக்கிறது. நமது வாழ்கையின் உபயோகத்துக்காகவே ஏற்படுத்தியிருக்கிற ஜோதிட சாஸ்திரத்தில் ஆறாவது ஸ்தானம் சத்துருஸ்தானமென்று காட்டியிருக்கிறது. அச்சத்துருவானவன் சிருஷ்டியில் வந்த தேவர்களுடைய கூட்டத்திலிருந்து தான் வரவேண்டியிருப்பதாலும், அப்படியே வந்ததாலும், ஆறாவது தொகை ஆதியில் சிருஷ்டியென்ற ஒரு தொழிலைக் குறித்து நின்றது. மனிதனுடைய சரீரமே தொழிலுக்காக ஏற்பட்டதென்பதற்கு ஐந்து விரல்களுள்ள அவன் கையே சாட்சி. எப்படியென்றால் ஐந்து விரல்களின் தொகைளை எண்ணிக் கருதுங்கள் 1, 2, 3, 4, 5, இந்தத் தொகையெல்லாம் கூட்டிப்பாருங்கள். மொத்தத்தில் 15 என்ற·எண் வருகிறது. இவ்வெண்ணின் முற் பகுதி 1 ஐயும் பிற்பகுதி 5 யும் கூட்டுங்கள் கூட்டி வந்த தொகை 6 ஆகும். ஆதலால் சிருஷ்டிகர்த்தாவான குமாரக்கடவுளுக்கு ஜோதிட சாஸ்திரத்தில் புத்திரனாகிய அவருக்கு 5 என்ற தொகையை விதித்து அவர் செய்யும் சிருஷ்டியின் தொழிலுக்கு ஆதியில் 6 என்ற தொகையை ஏற்படுத்தியது பொருத்தமாயிருப்பதைப் போல, மனிதனுடைய தொழிலுக்கும் அவனுடைய 5 விரல்களினால் 6-வது தொகையை அதி சூட்சுமமாய் குறிக்கும் கைகளை சாட்சியென்று சொன்னேன்.

இன்னுங் கேளுங்கள் கல்லால விருக்ஷத்தின் கீழ்

அமர்ந்து உபதேசம் செய்த காலத்து தெக்ஷிணாமூர்த்தியான குமாரக்கடவுள், தனது கைப் பெருவிரல் நுணியையும், ஆட்காட்டி விரல் நுனியையும், சேர்த்தும், மற்ற மூன்று விரல்களையும் மேலே உயர்த்தியும். சின் முத்திரையாகக் காட்டினார். அதாவது 1 ஐயும், 2 ஐயும், கூட்டி வந்த 3 னால், சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய மூன்று சக்திகளடங்கிய ஜோதிமயமான ஸ்ரீமந் நாறாயணணைக் காட்டினார். இதில் சத்து, சித்து, ஆனந்தம். பிதா, குமாரன், பராசக்தி, அல்லது பிர்ம்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மூன்று சக்திகளும் அடங்கினவாம்.

கையில், பெருவிரலின்றேல் மற்ற நான்கு விரல்களும் பிரயோஜனப்படாவாம். ஆனதால் பெருவிரலானது ஏகம் அல்லது ஒன்று எனத் தனித்து நின்றதைப்போல இங்கே சிவம் அல்லது பிரம்மம் என்று தனித்து நின்றது.

அன்பின் நிகழ்ச்சியின் காரணமாக தனித்து நின்ற அவ்வொன்றே இரண்டாகப் பிரிந்தது. ஏனென்றால் அன்பிற்கு அவ்வொன்று இரண்டாக வேண்டியதவசியம். அவ்விதமில்லா விட்டால் ஒருதலைக் காமமாகும். இந்த நியாயத்தை பெருவிரலுக்கடுத்த 2-வது ஆட்காட்டி விரலினால் நான், நீ யென்று சுட்டிக் காட்டுகிறோம், ஆகையால், இந்த ஆட்காட்டி விரலானது இரண்டு ஆன்மாக்களைத் தன்னிடம் அடக்கியுள்ளது. ஆதியில் ஏகமாய் நின்ற மூலக்கடவுளும், இரண்டாகப் பிரிந்த சக்தியும் சேர்ந்து சகல சிருஷ்டியையும் செய்ய வல்லமை வாய்ந்த ஸ்ரீமந் நாராயணணைக் காட்டியது.

இவ்வுண்மையைக் காட்டி சாட்சியார்த்தமாய் நின்ற 3, 4, 5வது விரல்களின் எண்களைக் கூட்டுங்கள் கூட்டி வந்த தொகை 12. இப் பன்னிரெண்டின் முற்பகுதி எண்ணாகிய 1 ஐயும் பிற்பகுதி எண்ணாகிய 2 ஐயும் கூட்ட 3 என்று விளங்குகிறது. இது தான் சின் முத்திரையின் உண்மையான தத்துவம்.

ஆகையால் ஏகமாய் நின்ற பிரஹ்மத்தைக் குறிக்கும் அத்துவைத்தால் நமக்கு என்ன விஷயம் ? ஒன்று இரண்டு படாவிட்டால் தேவர்களும் நாமும் வந்திருக்கமாட்டோம். ஆகையால் துவைதமே நமக்கு விஷயம். சித்து என்ற குமாரக்கடவுளல்லாது, சத்தாகிய பிரம்மத்தினிடத்தில் சமூகம் வாய்க்காது.

ஸ்திதி, அல்லது சம்ரக்ஷனை என்ற கிருத்தியத்தை வகித்த திரிமூர்த்திகளில் மகாவிஷ்ணுவானவர் இவ்வுலகில் தர்மத்தை ஸ்தாபனம் செய்யும் பொருட்டும், துஷ்டநிக்கிரக, சிஷ்டபரிபாலனஞ் செய்யும் பொருட்டும், கிரேதாயுகத்தில் ஸ்ரீராமனாகவும், துவாபரயுகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானாகவும் அவதாரம் செய்தவரே முதல் யுகமான கிரேதாயுகத்தின் சுப்ரமண்யமென்ற குமாரக்கடவுளாக இவ்வுலகத்தில் அவதாரம் செய்தார் என்று சொல்வோமேயானால் அதை: ஆராய்ச்சி செய்திறாதவர்கள் ஆக்ஷேபிப்பார்கள்.

ஆனால் பகவற்கீதையில் விஷ்ணு அவதாரமான ஸ்ரீகிருஷ்ணபகவான் வானுலகத்தில் சுர சைநியங்களுக்கு நாதனான ஸ்கந்தனே தாமென்று சொல்லியிருக்கிறார். ஆதலால் விஷ்ணுவே சுப்ரமண்யக்கடவுளென்பதில் என்ன சந்தேகம் ?

தத்துவங்களை ஆராய்ச்சி செய்தவர்கள் இக் கர்மலோகத்தில் ஏற்பட்டுள்ள ஆண், பெண், என்கிற பேதம், வானுலகத்தில் இல்லையென்று நன்கு அறிவார்கள். பிறப்பு எங்கே இருக்கிறதோ, அங்கே இறப்பும் தொடர்ந்தே இருக்குமென்பது திண்ணமில்லையா? இறப்பு எங்கே இருக்கிறதோ அங்கே சந்ததி அற்றுப்போகாமல் இருப்பதற்கு பிறப்பும் இருக்குமென்று நிச்சயமில்லையா?

வானுலகத்தில் பிறப்பும் இறப்பும் இல்லாததால் அங்கே ஆண், பெண், என்ற பேதம் உளதில்லையாம். பிறப்பும் இறப்பும் இக்கர்மலோகத்தை ஒட்டியது. அது பாவத்தினிமித்தமாக வந்தது. வானுலகத்தில் தேவர்கள் செய்யும் பாவத்தினால் நித்திய சரீரத்தை விட்டு, இந்த கர்மலோகத்தில் அநித்திய சரீரிகளாய் ஜென்மெடுக்கிறார்கள். ஆனால் இந்நிலைமை பாவமில்லாலே அன்பினால் தூண்டப்பட்டு பரோபகாரத்தை விரும்பிய, தேவர்கள் தன் சொந்த இச்சையினாலேயே தன் நித்திய சரீரத்தை விட்டு இவ்வுலகில் ஓர் போதகர், அல்லது ஓர் சமயாசாரிகளாக, அநித்திய சரீரத்தில் பிறந்து உபதேச மூலமாய் நமக்குப் பிரயோசனத்தைச் செய்வார்கள். "ஒவ்வொரு யுகத்திலும் தருமம் வழுவும்போதெல்லாம் நான் அவதாரம் செய்வேனென்று" விஷ்ணு அவதாரமாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் பகவத்கீதையில் சொல்லியிருக்கிறார்.

இவ்வாறு சென்ற மூன்று யுகங்களில் அவதாரம் செய்தவர். பாவம் மிகுதியாக இக்கலியுகத்தில் அவதாரம் செய்திருக்கிறாரா? என்று ஆத்ம விசாரனையில்

ஏக்கமுள்ள நமது இந்திய சகோதரர்கள் ஆராய்ந்து பார்க்கவும்

*நமது தமிழ் நாட்டிக்கு வேதமாகிய தேவாரத்தில் :-*

**எரியலால் உருவமில்லை ஏறலால் ஏறலில்லை**
**கரியலால்ப்போர்வையில்லை காண்டிடகுகாக்ஷியார்க்கு**
**பிரிவிலா அமரரெல்லாம் பெருந்தகைப் பிரானேன்றேத்தும்**
**அரியலால்த்தேவியில்லை ஐயணையாறனார்க்கே. ( )**

என்ற அப்பர் சுவாமிகள் சொன்ன வேத வாக்கியத்திற்கு இடராக, சைவ சமயத்தைக் கொண்டவர்கள் புராதன சிவஸ்தலங்களில் உட்பிரகாரத்தில் ஆதியிலமைக்கப்பட்ட விஷ்ணுவாலயத்தைப் பூட்டி பூஜையில்லாமலாக்கி விட்டார்கள். இதை மதுரை ஸ்ரீ மீனாக்ஷி ஆலயத்திலும், ஆதி சிதம்பரமென்று சொல்லும் உத்திரகோசமங்கை போன்ற ஆலயங்களிலும் இன்றைக்கு கண்கூடாகப் பார்க்கலாம். "அதியுஞ் சிவனும் ஒன்று" என்ற பழமையான உணர்ச்சி நமது தமிழ் நாட்டுப் பொதுஜன வாக்கியம். சம்ரக்ஷணை அதாவது (போக்ஷித்துக் காப்பாற்றுந் தன்மை) தாயின் தன்மையானதால் விஷ்ணுவை தேவி அல்லது சக்கியாக வேதமாகி தேவாரத்தில் "அரியலால் தேவியில்லை" யென்று சொல்லப்பட்டிருக்கிறது.

சக்தியோடு சிவன் கலந்து சிருஷ்டியைச் செய்ததால் அந்த சக்தியான ஸ்ரீ மகாவிஷ்ணுவே பிரணவம் ! அப்பிரணவத்தை, விக்கிநவிநாயகராக பிரணவாஹாரமாய் உபாசித்து வருகிறோம். இவருக்கு பிரதானமான மந்திரத்தை எந்த சங்கற்பத்திலும், எந்தக் கர்மாவின் ஆரம்பித்திலும், நம்மாலாவது அல்லது கர்மாவை நடத்திவைக்கும் உபாத்தியாயரினாலாவது, சொல்லப்பட்டு வருகிறது.

"சுக்கிலாம்பரதரம் விஷ்ணும், சசிவர்ணம்,"

என்ற மந்திரத்தை ஆரம்பத்தில் சொல்லிக்கர்மாவை நடத்துகிறோம். அதாவது வெள்ளை வஸ்திரம் என்ற நீதியை ஆடையாகக் கொண்டவரை, விஷ்ணு என்று சொல்லப்பட்டவரை பரிசுத்தத்தையே தமது நிறமாய் உள்ளவரை, என்று அர்த்தமுடைய மூலமந்திரத்தைச் சொல்லுகிறோம்.

## பிரணவம் என்பது என்ன ?

ஆதியில் அந்தகார இருள் சூழ்ந்த வெளியில் அளவில்லாத மூலப்பிரகிருதி சக்ராகாரமாய் அசைவற்று இருந்ததின் மத்தியில், அதாவது நாம் பாற்கடலாய் பாவித்துச் செல்லும் ஆழியின் மத்தியில் ஸ்ரீமத் நாராயணனாக நாம் பாவிக்கும் சிவமும், குமாரனும், சக்தியும் அல்லது சத்து, சித்து, ஆனந்தம் என்று சொல்லப்படும் திரயம் அடங்கிய வடிவமானது யோக நித்திரையில், அண்ட பிண்ட சராசரங்களை யெல்லாம் மானசீகமாய் தியானித்தது. ஆகவே அண்டபிண்ட சராசரங்களான சிருஷ்டி, தியான ரூபமாய் இருந்நது. அதன்மேல் தன் பூரண ஆவியின் வல்லமை நிறைந்த

சப்தத்தால் ஜோதி உண்டாகக் கடவது என்று ஆக்ஞாபித்தார்! உடனே அந்த மகத்தான சப்தத்தின் அலை அசைவற்று நின்ற மூலப்பிரகிருதியைக் தாக்கியது. தாக்கியவுடன் மூலப்பிரகிருதியானது அவ் வசைவின் வேகத்தால், ஜோதிமயமாய் விளங்கியது.

அது எப்படியெனில் ஓர் குதிரை அசைவற்றுக் கிடக்கும் சரளை ரஸ்தாவில் அதி வேகமாய்ச் செல்லுங்கால் அதன் காலிலுள்ள இரும்பு லாடத்திலிருந்து பளீரென்று ஜோதியுண்டாவதைப் போலவாம்.

இது தான் முதல் சிருஷ்டி. இதற்குக் காரணமாயிருந்த சப்தமே பிரணவம் ! ஆகவே, ஈசுரன் மனதில் தியான ரூபமாய் இருந்த சிருஷ்டி இப்பொழுது சப்த ரூபமாயும், ஆவி ரூபமாயும் ஜீவகலையுடனும், தோன்றியவர் ஓர் மூர்த்தி. அவர் துவாதசாத்மன் அதாவது பன்னிரெண்டு ஆத்மாக்களுள்ள, நக்ஷத்திர மண்டலங்களாயும் சூரியமண்டலமாயும் ஆனார். அவர் எங்கும் சிருஷ்டிகள் தோறும் சூரியமண்டலத்திற்கு நடுநாயகமாகிய சூரியனுடைய ஹிருதயத்தில் மூர்த்தீ கரித்திருக்கின்றார். இவரைத்தான் ஆதித்திய ஹ்ருதயமென்று மந்திரத்தில் ஜெபிக்கும் படி அந்தமந்திரத்தை அகஸ்திய மஹாமுனிவர் தளர்ச்சியடைந்த ஸ்ரீ ராமனுக்கு ராவணனை ஜெயிக்க வழிகாட்டி உபதேசித்தார்.

ஆதலால்த்தான் மேற்சொன்ன அகஸ்தியரின் கவியில் "ஆதியருணாசலமமர்ந்த பெருமானே" என்று சொல்லியிருப்பதில் அருணன் என்ற பாலசுப்ரமணியம் "அசலம்" என்ற கிரியான சூரிய மண்டலத்தின்

அமர்ந்தபெருமானே ! ஸ்ரீ மஹாவிஷ்ணுவே ! என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ராமர் விஷ்ணுவாம்சமல்லவா, அவரால் ஏன் ராவணனை ஜெயிக்க முடியவில்லை? என்று கேட்கப்படும். தசரதர் செய்த புத்திர காமேஷ்டி யாகத்திலிருந்து தோன்றிய தேவபுருஷன் பாயசத்தை தசரதருக்குப் பாலித்தார். அவர் அதில் சரி பாதியை தனது பட்ட மகிஷி கௌசல்யா தேவிக்குக் கொடுத்தார் இன்னொரு பாதியை மற்ற இரண்டு மனைவி மார்களுக்கும் கொடுத்தார். ஆதலால் ஆதித்தியன் அதாவது சூரிய மண்டலத்தின் ஹ்ருதயத்திலிருக்கிற பிரணவமே மூர்த்தீகரித்து விளங்கின ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அர்த்த பாகந்தான் ஸ்ரீ ராமனாக அவதரித்தார். ஆதலால் ஸ்ரீ ராமன் தளர்ச்சியுற்று ராவணனை வதைசெய்ய முடியாததை அறிந்த அகஸ்தியர் விஷ்ணுவின் பூரண பலத்தையடைய "ஆதித்திய ஹ்ருதய மந்திரத்தை" உபதேசித்தார் அம் மந்திரத்தை மூன்று தரம் ஜபித்தபின் ஸ்ரீ ராமர் ராவணனை சம்ஹாரம் பண்ணினாரென்று கூறப்பட்டிருக்கிறது.

ஈசுரனைப் பற்றிய ஞானத்தை நமக்கு எடுத்து உரைத்ததை இரண்டாவது கிருத்தியமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, ஈசரனுடன் அரசியல்பு இவ்விதமென்று, எவ்விதத்தால் இப் பிறப்பு இறப்பு ஏற்பட்டதென்றும், இந் நிலையிலிருந்து நாம் மீளப் பட்டு அநித்திய சரீரத்தை விட்டு நித்திய சரீரமெடுத்து எவ்வாறு சுகமடைவோம், என்ற போதனைதான், ஈசனுடைய மொழியான ஞானமொழியாகும்.

"கூறுமடியார்கள் வினைதீர்த்தமுகமொன்று," என்று மூன்றாவது கிருத்தியமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

கர்மா என்ற விதிவியாபகமாயிருக்கும் காரணத்தால், இந்த உலகத்திற்கு "கர்மலோகம்" என்ற பெயர் விளங்கா நின்றது அவ்விதி பலபல சொரூபங்களில் அமர்ந்திருக்கும் ஆன்மாக்களை கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது. அவ்வினையினின்றும் கடவுள் தம்மைக் கூறும் அடியார்களை எவ்விதம் நிவர்த்திப்பார் ? கடவுளின் சமூகத்தில் அன்பே காரணமாய் விளங்கும், அவருடைய காருண்யமானது, தான் படைத்த ஆன்மாக்களுக்கு விதித்த வினையிலிருந்தும் எவ்விதம் நிவர்த்திக்கக்கூடும் ? என்ற வழியைக் கவனிப்போமேயானால் தாம் விதித்த ஆணைக்குத் தாமே பிணையாகாவிடில் ஆன்மாக்களை விதியினின்றும் எவ்விதம் நிவர்த்திக்கக்கூடும்? தாம்விதித்த ஆணையைக் கடவுள் தாமேமறுத்துவிடுவாரா? அப்படி மறுத்துவிட்டால் சத்தியத்திற்கு என்ன மகிமை, என்ன பூஜிதை ஏற்படும் ? அதனால் ஒரு இழிவான உணர்ச்சி ஏற்படாதா ? மானிடருக்குள் சத்தியமான வாக்கை மறுத்தளித்தால் அதை இழிவாகக் கொள்ளுகின்றோமல்லவா ! ஆதலால் காருண்யத்தோடு விதிக்கு நிவர்த்தி தேடத் துணிந்தால் அவ்விதிக்கு அக்காருண்யமே பிணையாக வேண்டியது அவசியமென்பது தான் விவேகம். இல்லாவிட்டால் காருண்யத்திற்குப் பிரயோஜனமேயில்லை. ஆதலால் கடவுளின் காருண்யம் தாம் விதித்த விதிக்கு தம்மைத் தாமே பிணையாக்காவிடில் விதிக்குட்படுத்திய ஆன்மாக்களுக்கு எவ்வித நிவர்த்தியுமில்லை.

திருவள்ளுவ நாயனாரின் குறளில்

அன்பிலாரெல்லாந் தமக்குரியரன்புடையா
ரென்புமுரியர் பிறர்க்கு.

எனக்கூறியுள்ளார். இதில் அன்புடையவரின் இலக்ஷணத்தைக் கூறுங்கால் அவர்கள் அன்பினால் தம் உடலையும் பிறருக்கு அற்பணம் செய்வார்கள் எனும் பொன்மொழியை திருவள்ளுவர் கூறினார்.

இந்த நியாயத்தை தம்மிடம் அடைக்கலம் புகுந்த புறாவை, நாசம் செய்து இரையாக்க விதியைப்போல் வந்த ராஜாளிப் பட்சிக்கு அந்தப் புறாவினிடம் உண்டான அன்பின் மிகுதியால், சிபிச் சக்கரவர்த்தி நீதியினால் ஏற்பட்ட விதியைக் குறிக்கும் "துலாம்" என்ற தராசில் தமது எலும்பு உள்பட சரீரம் முழுவதையும் அப்புறாவைக் காப்பாற்ற பிணையாய் வைத்தார் !உயிரை விடுத்தார் ! மோட்சமடைந்தார் !

"அரசன் அன்று கேட்பான் - தெய்வம் நின்று கேட்கும்" என்ற வசனத்தின் விவேகம் என்ன ? கடவுளுடைய நீதியைக் குறிக்கும் துலாராசியாகக் காட்டப்பட்ட. தராசில் கடவுளுடைய மிகுந்த காருண்யத்தை ஒரு தட்டிலும் மானிட ஜாதியின் பாவங்கள் சேரச் சேர ஒரு தட்டிலும் நிறுக்கப்படுகிறது - கடவுளின் காருண்யத்தின் அளவுக்கு மானிடர்களின் நீதி பொருந்திருக்கும். ஒரு அணுவளவேனும் பாவமானது கடவுளின் காருண்யத்தைக் காட்டிலும் அதிகரிக்குமேயானால், நீதி விடுபட்டு, உடனே உற்பாதமான சிக்ஷையே உண்டாகும் ஆதலால்த்தான் "தெய்வம் நின்று கேட்கும்" என்றார்.

மனிதனாயிருந்த சிபிச் சக்கரவர்த்தி ஒரு உயிருக்காக தம்முடைய அன்பை சோதிக்கப்பெற்று தான் ஆத்மசாபல்யமடைந்தார். ஆனால், உலகத்திற்கு வந்த நாசத்தை நிவர்த்திக்க ஓர் மனிதன் தன்னுயிரை பிணையாக்கினால் நாசத்திலிருந்து காப்பாற்ற முடியுமா? கடவுளே தான் தமது நீதிக்குப் பிணையாக வேண்டும்.

இக் கலியுகத்தில் சுமார் 2000 வருடங்களுக்கு முன் மானிட ஜாதியின் பாவங்கள் மென்மேலும் அதிகரித்த சமயத்தில் இந்தக் கர்ம உலகத்தையே நாசஞ்செய்ய கடவுளின் நீதியானது. கடவுளின் காருண்யத்தை மீற எத்தனித்த பொழுது, பிரணவ சொரூபியாயும், விஷ்ணுவென்ற நாமத்தைத் தரித்தவராயுமுள்ள குமாரக் கடவுள், உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டு நீதியின் சிக்ஷைக்கு நானே உடன்படுவேன் ! பிணையாவேன் ! பலியாவேன் ! என்று சபதம் செய்தார்.

இதை ஜோதிட சாஸ்திரத்தில் சித்திர ரூபமாய் 12 இராசிகளில் காட்டியிருப்பதைக் கவனித்துப்பாருங்கள். கடவுளுடைய பராக்கிரமத்தையும், கோபத்தையும், சிம்மராசியின் சித்திரத்தில் காட்டியிருக்கின்றது. அதே திரிகோணத்தின் மூலையில் அக்கோபத்தாலெழும்பிய நாசத்தை, தனுர்ராசியின் சித்திரத்தில் அம்பு பூட்டப்பட்டு சந்தானம் செய்து வளைந்து நிற்கும் வில்லைப் பார்த்துக் கொள்ளவும்.

பாதி குதிரை உடலாகவும் பாதி புருஷ உடலாகவுமுள்ள ஒருவன் கையில் வில்லையும் அம்பையும் தோன்றச் செய்திருக்கிறது. குதிரை உடலாகக் காட்டியதின் குறிப்பு என்னவென்றால் ? நாசம் அதி வேகமாய்ச் சம்பவிக்கும் நிலைமையைக் காட்டியிருக்கிறது. ஆனால்

அம்போ பிரயோகிக்கப் படாமல் தடைபட்டு நின்றதைக் காட்டியது ஏனெனிலோ ? அத் திரிக்கோணத்தின் மூன்றாவது மூலையில் மேஷம் என்ற இராசியில் பலியைக் குறிக்கும் ஆட்டை சித்திரமாகக் காட்டியிருக்கிறது. இந்த மேஷ இராசியானது குமாரக்கடவுளின் இரண்டு நக்ஷத்திர மண்டலங்களில் அதாவது மேஷம் விருக்ஷிகமென்ற இரண்டு இராசிகளில் மிகுதியான பலத்தையுடைய மூல திரிகோணம் என்று சொல்லப்பட்ட மேஷ இராசியே மிக்க பலமான மண்டலமாம்.

இவ்வாறு உலகத்திற்கு வந்த நாசத்திற்குக் குமாரக்கடவுள் நான் பிணையாவேன் என்று ஆணையிட்டதால், தனுர் இராசியில் கிளம்பிய நாசமானது ஸ்தம்பித்து அம்பு பூட்டியவாறே நின்றது. பூட்டிய அம்புக்கு எதை லெட்சியமாகக் காட்டப்பட்டிருக்கிற தென்றால், அதற்கு சம சப்தமாய் எதிர்த்து நின்ற மானிட ஜாதியை ஆணும் பெண்ணுமாகக் குறித்திருக்கும் மிதுன இராசியின் சித்திரங்களையே லெட்சியமாகக் காட்டப்பட்டிருக்கிறது. மேஷ இராசியில் குறிக்கப்பட்ட "ஆடு" எதற்குப் பலியாகக் காட்டப்பட்டிருக்கிறதென்றால் அதற்கு சமசப்தமாய் எதிர்த்து நின்ற துலாராசியாகிய கடவுளின் நீதியை தராசாகக் காட்டப்பட்டிருக்கின்றது. இவ்விதம் வந்த நாசம் ஸ்தம்பித்து நின்றதின் நிமித்தமாக, சிம்ம இராசியில் காட்டிய கடவுளினுடைய கோபம் சாந்ததடைந்தது எதனாலெனில் ? சிம்ம இராசிக்குச் சமசப்தமாய் எதிர்த்து நின்ற கும்ப இராசியில் சித்திர ரூபமாய்க் காட்டியிருக்கும் கடவுளின் காருண்யத்தால்த்தான். "இக் காருண்யத்தையே" ஓர்

கும்பத்திலிருந்து வழியும் ஜலமாகக் காட்டப்பட்டிருக்கிறது.

கடவுளின் காருண்யத்தை தமது குமாரனின் அன்பால் உலகத்திற்கு வந்த நாசத்தை எச்சரித்து கும்ப முனியாகிய அகஸ்தியர் மூலமாக அறிவிக்கப்பட்டனவாம். கடவுளின் காருண்யத்தை நமது நாட்டுக்கு அறிவிக்கச் செய்த அகஸ்தியரின் சிறப்புப் பெயர் கும்ப முனியென்று வழங்கியதற்குக் காரணம் இதுவே. இதை அலங்கார இலக்கணத்துக் குகந்ததாக புராணீகர்கள் கடவுளின் காருண்யமாகிய சமுத்திரத்தையே அகஸ்தியபானஞ் செய்ததாகக் கூறினார்கள்.

கடவுளினுடைய காருண்யத்தின் அளவை அகண்ட சமுத்திரத்தின் விசாலத்திற்கு ஒப்பாகச் சொல்லப்பட்ட தானது ஓர் அலங்கார இலக்கணமே.

கடவுளினது நீதியமைந்த விதியினால் நாசத்துக்குள்ளாகிய மானிட ஜாதிக்கு கடவுளின் அன்பு நிறைந்த காருண்யம் தம்மையே பிணையாக்கி அம்மானிட ஜாதியை நீதியின் சிக்ஷயினின்றும் மீட்டினதினால் தம்மைக்கூறும் அடியார்களும் சேர்ந்து மீட்டப்பட்டார்கள். இக் கிருத்தியத்தினால் மானிடர்களுக்கு இன்னும் அநேக ஆண்டுகள் அநேக ஜென்மங்களெடுத்து உஜ்ஜீவித்திருக்கவும் அதில் இன்னும் அநேக ஆத்மாக்கள் சீர்பாடடைந்து அடியார்களுடைய பகுதியில்ச் சேர்வும் அனுக்கிரகித்தார். ஆதலால், தாமே பலியான நேரத்திலிருந்து, நிகழும் தலைமுறைகள் தோறும் மீட்டப்பட்ட ஆன்மாக்களாய் நிகழ்ந்து வருகின்றார்கள்.

இப்படி நிகழ்ந்துவரும் காலத்தின் முடிவானது குமாரக் கடவுளின் வரவை எதிர்பார்த்து நின்றது. அவ்வரவின் நேரம் கடவுளுக்குத்தான் தெரியுமேயொழிய மற்றும் தேவர்களுக்கும் தெரியாது. ஆனால் அவ்வரவுக்கு முற்குறியாக அதர்மம் மிகுந்த பலத்தோடு மீறிய பொழுது "தர்மமே தலைகாக்கும்" என்பதைத் திண்ணமாய் நம்பி பலக்குறைவை அடைந்த தர்மமானது, அதர்மத்துக்கு நேர் நின்று போர் செய்யும்.

இவ்விதமான முற்குறிகள் இச்சமயம் நமது உலகத்தில் பிரத்தியக்ஷமாய் நடந்து வருகின்றதை இத் தலைமுறையே பார்க்கிறோம். ஆகவே மேற்சொன்ன கவியில் கூறிய மூன்று கிருத்தியங்களும் கடவுளின் சத்துவ குணத்தைக் குறிக்கிறது.

அதாவது, அவருடைய பராக்கிரமத்தையும், அதர்மத்தைவென்று தர்மத்தை ஸ்தாபனம் செய்யும் பொருட்டும், குமாரக் கடவுள் .சுய ரூபத்திலும், வெற்றிவேலாகக் குறிக்கப்பட்ட பரம சக்தியுடனும் தோன்றி பின்வரும் கிருத்திகளை செய்தாரென்று கூறப்பட்டிருக்கிறனவாம்.

மானிட ஆன்மாக்கள் மேற்சொன்ன விதமாய் மீட்டப் பட்டும், நன்றியில்லாத பெரும்பான்மையான ஆன்மாக்கள் குன்றுக் குச்சமானமாய் கடின சித்தத்தையுடையவர்களாய் அதர்மத்தையே கைக்கொண்டு நிற்பவர்களை, நாலாவது கிருத்தியமாய் அதம் செய்வார்.

இதைக் "குன்றுருவ வேல்வாங்கி நின்ற முகம்" என்று சொன்ன வாக்கியத்தில் துலக்கியிருக்கிறது.

மாறுபடா சூரனை வதை செய்வதை ஐந்தாவது கிருத்தியமாய்ச் சொல்லியிருக்கிறது - சூரன் என்பவன் யார் ? இவ்வுலகத்தில் அச் சூரனின் நிலைமை என்ன ? அச் சூரணை எதற்காக வதை செய்ய வேண்டும் !

ஆதியில் சுவர்க்க வாசிகளில் சூரன் மகாபராக்கிரமசாலியாயிருந்ததாயும், தன்னுடைய பராக்கிரமத்தை நினைத்து மௌட்டீகத்தாலும், பெருமையாலும், தன்னைச் சேர்ந்த அளவிறந்த சைநியங்களொடு சுவர்க்கத்தில் கடவுளுடைய தேவைப்படைகளோடு போர் புரிந்ததாக ஸ்காந்தத்தில் சொல்லியிருப்பதை அறிந்திருப்பீர்கள்.

இவ்விதமே "பைபிள்" என்ற கிறிஸ்தவர்களின் வேதத்தின்பழைய ஆகமத்திலும், புதிய ஆகமத்திலும், இப்போரைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் படையெடுத்த சூரனுக்கும் அவனைச் சேர்ந்த சைநியங்களுக்கு அசுரர்களென்று கூறப்படும்.. கடவுளைச் சேர்ந்த தேவ சைநியங்களுக்கு அசுரர்களென்று கூறப்படும். கடவுளைச் சார்ந்த தேவ சைநியங்களுக்கு சுரர்களென்றும், கூறப்படுகிறது. சுர சைநியங்களுக்கு அசுர கைநியங்களுக்கு வெல்லமுடியாமல் தவித்த பொழுது குமாரக்கடவுள் சுர சைநியங்களுக்கு நாதனாயும், ஸ்கந்தனென்ற நாமத்தை வகித்தும், கோபாக்கினியினால் சிவந்த நிற முற்றும், தன்னுடைய பரம சக்தியால் அசுர சைநியங்களுடன் போரிட்டு சூரனை வென்று பாதாளத்தில் தள்ளினார்.

இந்தச் சூரனுக்கு, லத்தீன் பாஷையில் "சதானாஸ்" என்றும். ஆங்கிலேயத்தில் "சேடன்" என்றும். குரான்

எழுதப்பட்ட அரபிபாஷையில் "சைத்தான்" என்றும். சமஸ்கிருதபாஷையில் "சாஸ்த்தா" வென்றும். தமிழ்நாட்டில் (ஊறு சாஸ்த்தா என்றும்) வழங்கி வந்திருக்கிறது. இதுவரை ஐயனாரென்ற ஏற்றமுள்ள பெயரால் தமிழ் பாஷையில் கூறப்படுகிறது.

குமாரக்கடவுளின் ஆறு கிருத்தியங்களும் இப்பூமியின் கண்ணே நடத்தப்படுவதாக மேல்சொன்ன கவியில் சொல்லி இருக்கிறதினால், "அச்சூரனும்" அவரைச் சேர்ந்த அசுர சைநியங்களும், சுவர்க்கத்திலிருந்து தள்ளப்பட்டு பாதாளமான அகண்ட வெளியின் வழியாய் இந்தப் பூமியில் விழுந்தார்களென்ற தீர்மானத்தைக் கொள்வதற்கு. குமாரக்கடவுள் இப்பூமியினிடம் வரும் பொழுது சூரனை வதைசெய்தார் என்ற வாக்கியம் ஆதாரமாய் இருக்கிறது.

"மாறுபடா சூரன்" என்று சொன்னதிலிருந்த, தாம் கொண்ட கொள்கையான அதர்மத்திலிருந்தும் மாறுபடாமலிருந்தவனென்பதை விளக்கும். இவ்வுலகத்தில் அதர்மம் விருத்தியாகிக் கொண்டும், தர்மம் குன்றிக்கொண்டும், வருகிறதற்கு அச்சூரனே காரணம்.

சூரன் தவிர அவனைச்சேர்ந்த சைநியங்கள் பாவத்திற்காக ஏற்பட்ட வினைக்கு உட்பட்டு, தமது நித்தியசரீரங்களை இப்பூமியின் பிருதியோடு கலந்து, அவ்வான்மாக்கள் இப்பூமியின் பிருதிவிலிருந்து அநித்திய சரீரங்களை எடுத்துக் கொண்டு பிறப்புக்கும் இறப்புக்கும் உட்பட்டு நின்றன.

ஆனால் சூரனோ ! அவ்விதிக்கு விலக்கப்பட்டு கடவுளின் உத்தேசம் நிறைவேறும் பொருட்டு சுவாதந்திரியனாய் இவ்வுலகின் கண்ணே வசிக்கின்றான் - பாவத்துக்குட்பட்ட அவனைச் சேர்ந்த அளவிறந்த ஆன்மாக்களை வினையென்ற விதி எவ்விதம் பீடித்தது என்பதை அடுத்த அதிகாரத்தில்ச் சொல்லுவோம்.

இந்தச் சூரன் நமது தென் நாட்டையே தன் இருப்பிடமாயாக்கினானென்பதற்கு, நமது தென்னாட்டுக் கிராமங்கள் தோறும் "அய்யனார்" என்ற சாஸ்த்தாவின் ஆலயங்களிருப்பதைப் பார்க்கலாம். இவர்தான் கிராம தேவதைகளுக்குள் பிரதனாமான தேவததை. இவருக்குத்தான் அரசருக்குள்ள அதிகாரச் சின்னங்களை நமது நாட்டு மக்கள் அமைந்திருக்கின்றார்கள்.

அதாவது :- சதுரங்க சைநியங்களில் மூன்று வித சைநியங்களைக் குறிக்கும் யானை, குதிரை, காலாள் முதலியவைகளைச் சிலா ரூபமாய் இவ்வாலயத்தின் முகப்பில் இன்றைக்கும் பார்க்கலாம்.

"ஐயனார்" என்று சொல்லும் இவரை, இந்தப்பூலோகத்துக்கே அரசரென்று கிறிஸ்து பிறானின் திருவாக்கினாலே சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தப் பாவ உலகத்தில், கடவுளுடைய பரிசுத்தமான சமூகம் நேருக்கு நேர் வியாபகமாயில்லாமல் பாவத்துக்கு முதல் காரணமாயிருந்த "சூரனே" அரசனாக

விளங்கா நின்ற சாஸ்த்தாவுக்கு அதிகாரத்தைக் கொடுத்து. அவர் கோஷ்டியைச் சேர்ந்த இவ்வுலகின் கண்ணுள்ள சகல ஜீவராசிகளையும் உட்படுத்தும் பிறப்பு, இறப்பு என்ற விதியின் அதிகாரத்துக்கு இவரையே தலைவராக்கப்பட்டிருக்கிறாரென்பது விளங்கும்.

ஆகவே குமாரக்கடவுள் இக் கடல் சூழ்ந்த உலகத்தின் செங்கோலைக் கைப்பற்ற வரும்பொழுது ஐந்தாவது கிருத்தியமாய் இந்த உலகத்திற்கு தற்சமயம் அரசனாயிருந்து, தாம் கொண்ட பாவ வழியினின்றும் மாறாத இச்சூரனான சாஸ்த்தாவை வதை செய்வார் பிறகு ஆறாவது கிருத்தியமாய் நமது பூமியே பெண்ணாகச் சொல்லப்பட்ட "வள்ளியை" மணஞ்செய்வார். அதாவது இப்பூமிக்கே அரசனாவார்.

முன் சொன்னவாறு மீட்டப்பட்டமானிடர்களுக்குள் தூய்மையான சிந்தனையும், ஒழுக்கத்தையும் கைக்கொண்டவர்களைக் குறிப்பிடப்பட்டு அக் குமாரக்கடவுளான அரசனுக்கு அவர்களைக் குடிகளாக்கி பாவங்களென்றபேதம் ஒழிந்து! பிறப்பு, இறப்பு என்ற விதி ஒழிந்து! "நித்திய சரீரிகளாய்" "அழியாத ஜீவிகளாய்" சாந்தமும், நீதியுமுள்ள இவ்வரசனான குமாரக்கடவுளின் அரசாட்சியின் சாமீப்பியத்தில், நித்தியானந்தமாய் சுகமடைந்து வாழ்ந்திருப்பார்கள். நமது வாழ்க்கையின் விர்த்தாந்தத்தையும், இப்படி குமாரக் கடவுளின் வரத்தையும், உணர்ந்து வாழ்வதே வேதம்! அதுவே உண்மையான அறிவு! அதுவே! வேதத்தின் முடிவும், எல்லையுமாம்.

நல்ல நிலத்தில் விதைத்த விதையைப்போல், இச்சிரு நூலானது மக்கள் பல்லோருக்குப் பயன்படுமாறு "ஆண்டவன் அருள்பாலிப்பானாக".

குறிப்பு :-

"வள்ளியை மணம்புணர" என்று சொன்ன வாக்கியத்தில் மேலே கண்ட கவியில்ச் சொல்லியிருக்கும் ஆறு கிருத்தியங்களும் இவ்வுலகின் கண்ணே நடாத்தப் பெருகிறதென்று நன்கு விளங்கும். குமாரக்கடவுளுக்கு பிரதான மகிஷியான "தெய்வயானையை" மேற்சொன்ன கவியில் சொல்லாமல் "வள்ளியை" மட்டும் சொல்லியிருக்கும் காரணம்பற்றி குமாரக்கடவுளின் வல்லமையான கிரியா சக்தியைக் குறிக்கும்பொருட்டு தெய்வானையை புராணீகர்கள் கிரியா சக்தியான தத்துவத்தை பெண் உருவமாய்ச் சொன்னார்கள்.

ஆதலால் இந்தக் கவியில் "தெய்வானையை" கிரியா சக்தியாக சொல்ல வேண்டிய அவசியமில்லை. இவ்வுலகத்தில் குமாரக்கடவுளின் இச்சா சக்தியால் அதவாவது அன்பினால் மனித சரீரம் எடுத்து தன் உயிரைத் தியாகம் செய்து "வள்ளியை" இச்சா சக்தியைக் குறிப்பதற்காக பெண் உருவமாய்ச் சொன்னார்.

சாந்தி - சாந்தி - சாந்தி



## *25.01.1897* இல் இராமநாதபுரத்திற்கு வருகை தந்த சுவாமி விவேகானந்தருக்கு ராஜா தினகர் வரைந்து வாசித்தளித்த வரவேற்பிதழ்

***His Most Holiness,***

*Sri Paramahamsa, Yati-Raja, Digvijaya-Kolahala, Sarvamata-Sampratipanna, Parama-Yogeeswara, Srimat Bhagavan Sree Ramakrishna Paramahamsa Karakamala-Sanjata, Rajadhiraja-Sevita, SREE VIVEKANANDA SWAMY MAY IT PLEASE YOUR HOLINESS.*

*We, the inhabitans of this ancient and historic samsthanam of sethu Bandha Rameshwar, otherwise known as Ramanathapuram or Ramnad, beg, most cordially, to welcome you to this, our motherland. We deem it a very rare privilege to be the first to pay your Holiness our heartfelt homage on your landing in India, and that, on the shores sanctified by the footsteps of that great Hero and our revered Lord - Sree Bhagavan Ramachandra.*

*We have watched with feeling of genuine pride and pleasure the unprecedented success which has crowned your laudable efforts in bringing home to the master-minds of the West theintrinsic merits and excellence of our time-honoured and noble religion. You have with an eloquence that is unsurpassed and in language plain and unmistakable, proclaimed to and convinnced the cultured audiences in Europe and America that Hinduism fulfils all the requirements of the ideal of a universal religion and adapts itself to the temperament and needs of men and women of all races and creeds. Animateed purely by a disinterested impulse,*

*influenced by the best of motives and at considerable self-sacrifice, Your Holiness has crossed boundless seas and oceans to convey the message of truth and peace, and to plant the flag if India's spiritual triumph and glory in the rich soil of Europe and America. Your Holiness has, both by precept and practice, shown thee feasibility and importance of universal brotherhood. Above all, your labours in the West have indirectly and to a great extent tended to awaken the apathetic sons and daughters of India to a sense of the greatness and glory of their ancestral faith, and to create in them a genuine interest in the study and observance of their dear and priceless religion.*

*We feel we cannot adequately convey in words our feelings of gratitude and thankfulness to your Holiness for your phianthropic labours towards the spiritual regeneration of the East and the West. We cannot close this address without referring to the great kindness which your Holiness has always extended to our Raja, who is one of your devoted disciples, and the honour and pride he feels by this gracious act of your Holiness in landing first on his territory is indescribable.*

*In conclusion, we pray to the Almighty to bless your Holiness with long life, and heath, and strength to enable you to carry on the good work that has been so ably inaugurated by you.*

*with respects and love,*
*We beg to subscribe ourselves,*
*Your Holiness most devoted and obedient DISCIPLES*
*and SERVANTS*

*RAMNAD*
*25th January, 1897.*

பின்னிணைப்பு - III

## சிங்கம்பட்டி மன்னருக்கு ராஜா தினகர் வரைந்து அனுப்பிய கடிதம்

Rama Mauthiram
~~PALACE,~~
RÁMNAD.

To His Highness
The Rajah Theerthapathy
of Singampatty Samasthanam

Your Highness,

The bearer Kumara-
velu Pillai, though formerly of
good status has fallen into
poor circumstances & he has
a daughter long remaining
unmarried & a chance has
come his way to get her
at last married.

Being as I said in very

Poor Circumstances, he has to rely on the Charity of the Lords of the Soil such as Your Highness

Among the Virtues, the Charity of helping to Create a family to which the giving in marriage a Virgin (Kanyadan) is essential, stands pre-eminent

I very Earnestly recommend the case of the bearer as a very deserving Charity

I remain
Very Respectfully &
Affectionately
Dhakara

Rama Manthiram
Ramnad

His Highness
The Rajah Theerthapathy of
Singampatti Samasthanam.

Your Highness,

The bearer kumaravelu piiiai though formerly of good status has fallen in to poor circumstances. He has a daughter long remaining unmarried and a chance has come his way to get her atlast married.

Being as I said in very poor circumstances, he has to rely on the charity of the Lord's of the soil such as your Highness.

Among the virtues, the charity of helping to creat a family to which this giving the marriage a virgin is essential, stands preeminent.

I very earnestly recommend this case of this bearer as a very deserving charity.

Yours
Very respectfully and affectionately

Bhaskara

